தமிழ்த்தேசிய

# செங்கொடி

அரசியலை ஆணையில் வையுங்கள் –மாவோ





இதழ் 2 ஏப்ரல், 2019 தனிச்சுற்றுக்கு மட்டும் விலை ரூ.20/-

# நெய்தலும் பாலையாகும்



தமிழ்த்தேசிய செங்கொடி இதழை தோழர் பெரியவர் (எ) சுந்தரம் அவர்கள் 1995 ஆம் ஆண்டு தொடங்கும் எண்ணத்துடன் தோழர்களை அரியலூர் மாவட்டம், செந்துறை வட்டம், உஞ்சனி கிராமத்தில் கூட்டினார். அதில் தோழர்கள் சுவை. முருகேசன், செங்குட்டுவன், தமிழ்வாணன், சின்னத்தம்பி, கலை, குமார், அறிவழகன், தியாகராஜன் ஆகியோரைக் கூட்டி அமைப்பிற்கு ஒரு மாதஇதழ் நடத்தவேண்டும் என்றும், அதற்காக இதழின் பெயர், இலச்சினை ஆகிவற்றை உருவாக்க வேண்டும் என்றும் கூடிப் பேசப்பட்டது.

‘நாம் பாட்டாளிகள் நமது லட்சியம் சர்வதேசியம்’ இதனைக் குறிக்கும் வகையில் உலக உருண்டையும் ‘நாம் தமிழர்கள் நமது தேசியம் தமிழ் தேசியம்’ இதனைக் குறிக்கும் வகையில் தமிழ்நாடு வரைபடத்தையும் உருவாக்க வேண்டும் என்றும் முடிவு செய்யப்பட்டது. பகுதி ஓவியர் ஒருவரை அழைத்து மேற்கண்ட முடிவின்படி உலக வரைபடம் இடது பக்கமும் தமிழ்நாடு வரைபடம் வலது பக்கமும் முகப்பு அட்டையில் உருவாக்கும் வகையில் எடுத்துக் கூறப்பட்டது.

இதழின் இலட்சியங்களாக சோசலிச நெறி, தமிழ்த்தேசியம், புதிய ஜனநாயகம், உழவர் திட்டம், புதிய சமூகநீதி இதன் அடிப்படையிலேயே மார்க்சிய, லெனினிய, மாசேதுங் தத்துவார்த்த அரசியலை எளிய நடையில் உழைக்கும் மக்கள் படிக்கும் வகையில் கடந்த காலப் போராட்ட வரலாற்றை விமர்சனக் கண்ணோட்டத்துடன் எடுத்துக் கூறுவது எனவும், தோழர்கள் அப்பு, பாலன், கண்ணாமணி, தமிழரசன் உட்பட போராட்டத்தில் உயிர் நீத்த தோழர்களின் அரசியலையும், சர்வதேச அளவில் போராட்டத்தில் ஈடுபட்ட தோழர்களின் அரசியலையும் எழுத வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது.

மார்க்சின் காலம் முதலாளித்துவ காலம், இலெனின் காலம் ஏகாதிபத்திய காலம், நம் காலம் பன்னாட்டு பகாசுரக் கம்பெனிகள் காலம் இதனை அடிப்படையாகக் கொண்டு இதழின் அரசியல் இருக்கவேண்டும் என்றும் 1994இல் வெளியிடப்பட்ட சாதிய உறவு அடிப்படையில் சாதிய சிக்கலுக்கான தீர்வு இருக்கவேண்டும் என்றும் கூறி அன்றைய அமர்வு நிறைவுசெய்யப்பட்டது. அந்த அமர்வில் இலச்சினை மற்றும் அரசியல் எப்படி இருக்க வேண்டும் என்றும் முடிவு செய்யப்பட்டாலும் இதழுக்கு பெயர் குறிப்பிடாமல் கூட்டம் நிறைவு செய்யப்பட்டது.

அதன் பிறகு 22 ஆண்டுகள் கழிந்தும் அமைப்பிற்கு இதழ் தொடங்கப்படாத சூழ்நிலை ஏற்பட்டுவிட்டது. தோழர் சுந்தரம் அவர்களும் 9.6.2017 அன்று இயற்கை எய்தினார். அவரது முதலாம் ஆண்டு நினைவு நாளில், அதாவது 23 ஆண்டுகள் கழித்து 'தமிழ்த்தேசிய பாதுகாப்பு இயக்கம்' என்ற அமைப்பை தொடங்கி, 3.10.2018 அன்று தோழர் சுந்தரம் அவர்களின் அரசியல் விருப்பங்களை நிறைவேற்றும் நடைமுறையுடன் 'தமிழ்த்தேசிய செங்கொடி' இதழை கடலூர் மாவட்டம், காட்டுமன்னார்குடி வட்டம், நத்தமலை கிராமத்தில் அவர் அடக்கம் செய்யப்பட்ட இடத்தில் இருந்து முதல் இதழை மூத்த தோழரும் தமிழ் தேசியக் கொடி இதழின் ஆசிரியருமான சுவை.முருகேசன் அவர்கள் வெளியிட தமிழக ஒடுக்கப்பட்டோர் விடுதலை இயக்கத் தோழர் செந்தீ. நாகவரசன் அவர்கள் பெற்றுக் கொண்டார். இந்நிகழ்வில் தமிழ்த்தேசிய பாதுகாப்பு இயக்கத் தோழர்கள் கலந்துகொண்டு இதழின் அரசியலையும் இயக்கத்தின் போராட்ட வரலாற்றையும் எடுத்துக் கூறினர்.

– தோழர் சி.தியாகராஜன்

# மக்களே போராடுவோம்

ஓர் இனப்படுகொலைக்கு இணையான இடப்பெயர்வு, இயற்கைப் பேரழிவிற்கு இணையான சீர்குலைவு, என கடலூர் மாவட்ட மக்களையும் அதன் இயற்கை சூழ்நிலை தன்மைகளையும் சிதைத்து, பூதாகரமாக வளர்ந்துயர்ந்த கோபுரங்களில் புகைக் கக்கிக் கொண்டிருக்கும் நெய்வேலி பழுப்பு நிலக்கரி (இந்தியா) நிறுவனம், 2025 ஆம் ஆண்டுக்குள் 20,017 மெகாவாட் மின்சாரத்தை உற்பத்தி செய்வது தனது இலக்கு என வெறிக் கூச்சலிட்டுக் கொண்டு இருக்கிறது. அவ்வெறிக்கூச்சலுக்கு வலுசேர்க்க தற்போது கடலூர் மாவட்டம் புவனகிரி மற்றும் கம்மாபுரம் வட்டத்திற்கு உட்பட்ட 26 கிராமங்களை விழுங்க காய் நகர்த்துகின்றது. மத்திய சுற்றுச்சூழல் அமைச்சகத்திடம் அதற்கான அனுமதியையும் என்.எல்.சி நிர்வாகம் பெற்றுள்ளதை கடலூர் மாவட்ட வருவாய் அலுவலர் சந்திரசேகரன் (என்.எல்.சி நிலம் எடுப்பு) உறுதிப்படுத்தியுள்ளார்.

இந்த ஏற்பாடுகளைச் செய்து வைத்துவிட்டுத்தான் கடலூர் மாவட்ட நிர்வாகத்திடம் கொளப்பாக்கம், அரசக்குழி, கோ.ஆதனூர், பெருவரப்பூர், பெருந்துறை, ஓட்டிமேடு, கொட்டிமுளை, சிறுவரப்பூர், க.புத்தூர், சாத்தப்பாடி, தர்மநல்லூர் உள்ளிட்ட 26 கிராமங்களில் 50 கிலோமீட்டர் சுற்றளவில் 12,125 ஏக்கர் விவசாய நிலத்தை கையகப்படுத்தித் தருமாறு கேட்டுள்ளது என்.எல்.சி நிர்வாகம்.

ஏற்கனவே சுரங்கம்-1, சுரங்கம்-1 (விரிவு), சுரங்கம்-2 என மூன்று சுரங்கங்களில் ஆண்டுக்கு 28.5 மில்லியன் டன் நிலக்கரியை வெட்டி எடுத்துக்கொண்டிருக்கும் என்.எல்.சி நிர்வாகம், மேலும் ஆண்டிற்கு 11.5 மில்லியன் டன் நிலக்கரியை வெட்டி எடுக்கும் திட்டத்திற்கு சுரங்கம் 3 எனப் பெயர் சூட்டியுள்ளது.

ஆனால் இத்திட்டத்திற்காக 'ஒரு குழி நிலத்தைக் கூட தர இயலாது' என்பதில் மக்கள் உறுதியாக உள்ளனர். இதையே கடந்த டிசம்பர் 11, 2018 அன்று நெய்வேலி என்.எல்.சி மேல்நிலைப்பள்ளியில் நடத்தப்பட்ட கருத்து கேட்பு கூட்டத்தில் சம்பந்தப்பட்ட 26 கிராம மக்களும் உறுதியாக தெரிவித்து உள்ளனர். மக்கள் கருத்து இப்படியிருக்க கடலூர் மாவட்டத்தைச் சேர்ந்த தமிழ் நாட்டின் தொழிற்துறை அமைச்சரான எம்.சி.சம்பத் கடந்த ஜனவரி 6ஆம் நாள் செய்தியாளர்களுக்கு அளித்த நேர்காணலில் "நெய்வேலி நிலக்கரி சுரங்கம்-3வது திட்டத்தை நிறுத்த இயலாது" என்று தெரிவித்துள்ளார்.



உலக முதலீட்டாளர்கள் மாநாட்டில் என்.எல்.சி நிறுவன சேர்மேனுடன் தமிழக முதல்வர் எடப்பாடி பழனிச்சாமி

இதையேதான் தமிழக முதல்வர் எடப்பாடி பழனிச்சாமியும் 23,800 கோடி ரூபாய் முதலீட்டுக்கு நெய்வேலி நிலக்கரி நிறுவன சேர்மன் ராகேஷ் குமார் உடன் உலக முதலீட்டாளர்கள் மாநாட்டில் புரிந்துணர்வு ஒப்பந்தத்தை (M o U) ஏற்படுத்தி அதன் மூலம் சொல்லாமலேயே உணர வைத்திருக்கிறார்.

ஒருபுறம் 'நிலத்தை கொடுக்க முடியாது' என மக்கள் உறுதியாகவும் மறுபுறம் 'நிலத்தை பிடுங்கியேத் தீர வேண்டும்' என்ற பிடிவாதத்துடன் என்.எல்.சி நிர்வாகமும், மாநில அரசும் இருந்து வருகின்றன.

1960 முதல் 2018 வரையில் கையகப்படுத்தப்பட்ட நிலங்களை வழங்கிய விவசாயிகளுக்கு இதுவரையில் மாற்று மனை, மாற்று நிலம், வேலைவாய்ப்பு, நிலத்திற்கான இழப்பீடு என எதையுமே சரிவர என்.எல்.சி நிர்வாகம் வழங்க வில்லை. இதனை மாவட்ட நிர்வாகம் மற்றும் மத்திய, மாநில அரசுகளும் கண்டுகொள்வதில்லை.

என்.எல்.சி.க்கு நிலத்தை கொடுத்த மக்கள் நிவாரணத்திற்காக கடலூர் மாவட்ட ஆட்சியர் அலுவலகத்திற்கும் என்.எல்.சி அலுவலகத்திற்கும் அலைவதையே தொழிலாகக் கொண்டு சொந்த மண்ணிலேயே அரைநூற்றாண்டுக்கும் மேல் அகதிகளாக்கப்பட்ட கொடுமை வேறு எங்கும் நடக்காதது. நடக்கக் கூடாதும் கூட.

ஏற்கனவே சுரங்கம்-2 விரிவாக்கத்திற்கான நிலங்களை எடுத்து அவற்றைப் பயன்படுத்தாமல் வைத்திருக்கும் என்.எல்.சி நிர்வாகம் இப்போதைக்கு இத்தனை கிராமங்களை எடுக்க ஏன் துடிக்கின்றது? என்ற குழப்பத்தில் பலரும் ஆழ்ந்திருக்கின்றனர்.


கோயிலில் தஞ்சமடைந்திருந்த ஊ.ஆதனூர் கிராம மக்கள்

இக்குழப்பத்திற்கு தெளிவான விடையை கடந்த 2017 ஆம் ஆண்டு ஏப்ரல் முதல் வாரத்தில் நெய்வேலி நிர்வாகத்தால் வெளியேற்ற முயன்று ஆனால் தன் சொந்த மண்ணை காப்பதற்காக நில எடுப்பு அதிகாரிகள், சி.ஆர்.பி.எப் காவலர்கள் என அனைவரையும் விரட்டியடித்த ஊ.ஆதனூர் கிராமத்து மக்கள்தான் கொடுத்தனர்.

என்.எல்.சி சுரங்கம்-2 லிருந்து நீரை வெளியேற்றும் கால்வாய் அமைப்பதற்காக அந்த கிராமத்தை கையகப்படுத்த 2008 ஆம் ஆண்டு அறிக்கை விடப்பட்டது. ஆனால் மெல்ல மெல்ல நாட்களை கடத்தி 2017 ஆம் ஆண்டு தான் அக்கிராமத்தை கையகப்படுத்தினர். நிலத்தை கையகப்படுத்த அறிவிப்பு வெளியான 2008 ஆம் ஆண்டு சந்தை மதிப்பு என்னவோ, அதையே தான் 2017 ஆண்டு கையகப்படுத்தப்பட்ட நிலங்களுக்கு வழங்கினர்.

பொதுவாக நிலத்தை கையகப்படுத்துவதற்கான அறிவிப்புகள் அறுவடை காலங்களில் வெளியாகும். தற்போதும் அப்படித்தான் வெளியாகியுள்ளது. அப்படி செய்தால்தான் உழவர்கள் அறுவடை முடிந்த பிறகு நிலத்தில் பயிரிட மாட்டார்கள். அப்படி நிலத்தில் பயிரிடாத உழவர்கள் நாளடைவில் வறுமையில் வாடுவதும் நெய்வேலி நகர பகுதிகளில் கூலி வேலைக்குச் செல்வதுமாக மாற்றப்படுகின்றனர். அவ்வப்போது குறிப்பாக விதைக்கும் காலங்களில் ‘நிலத்தை நாளை எடுக்க இருக்கிறோம், நாளை மறுநாள் எடுக்க இருக்கிறோம்’ என்பது போன்ற செய்திகளை கசிய விடுவார்கள். சில வருடங்கள் இப்படி கழிந்ததும், உழவர்களுக்கும் நிலத்திற்கும் இடையிலான உறவு குறைந்ததும், திடீரென ஒருநாள் நில எடுப்பு அதிகாரிகள், சி.ஆர்.பி.எப் காவலர்கள், உள்ளூர் காக்கிகள் என வந்திறங்கி ஏதேனும் ஒரு ஊரை காலி செய்து விட்டு சென்றுவிடுவார்கள். பின்னர் மற்ற கிராமங்கள் எல்லாம் எளிதில் காலியாகிவிடும்.

இம்மாதிரியான காலம் தாழ்த்தும் நடைமுறையின் மூலம் நெய்வேலி நிர்வாகத்திற்கு இரண்டு நன்மைகள். ஒன்று உழவர்களை ஒட்டாண்டியாக்கி அவர்களை கட்சி ரீதியாகவும் சாதி ரீதியாகவும் பிரித்து எவ்வித ஆர்ப்பாட்டமும் இன்றி நிலத்தை கையகப்படுத்துவது. மற்றும் தற்போது கையகப்படுத்தப்படும் நிலத்திற்கு பல ஆண்டுகளுக்கு முந்தைய விலையை கொடுத்து நிலத்தை பெற்றுக்கொள்வது. இவை தான் இது நாள் வரை நடந்தவை. இவற்றிற்கு எதிராக மக்களும், கட்சிகளும் என அனைவருமே ஆரம்பத்தில் வலுவான எதிர்ப்பு காட்டினாலும் நாளடைவில் வேலைவாய்ப்பும் உரிய இழப்பீடும் கிடைத்தால் போதும் என்ற மனநிலைக்கு வந்துவிடுகின்றனர்.

இம்மாதிரியான பின்னடைவுகளுக்கு அடிப்படையாக இருப்பது இப்பிரச்சனை நிலம் எடுக்கப்பட இருக்கும் வெறும் 26 கிராமங்களின் பிரச்சினையாக பார்க்கப்படுவது தான். இது நாள் வரையில் நிலம் எடுக்கப்பட்ட கிராமங்களின் பிரச்சினையையும் சம்பந்தப்பட்ட கிராமத்து மக்களைத் தவிர மற்ற கிராமத்து மக்கள் இவ்வாறே கண்டனர். வருங்காலத்தில் எடுக்கப்படவிருக்கும் கிராமங்கள் கூட தற்போது நடக்கும் பிரச்சனைக்காக போராட போவதில்லையே!

என்.எல்.சி நிர்வாகத்தால் நிலம் கையகப்படுத்தப்பட்ட கிராமங்கள் மட்டுமின்றி, கடலூர் மாவட்டத்தைச் சார்ந்த மற்ற கிராமங்களும், இயற்கைச் சூழலும் இச்சுரங்ககளினாலும், அனல்மின் நிலையத்தினாலும் பாதிக்கப்படுகின்றன.

- பொதுவெளியில் நிலக்கரியை கையாள்வதால் வெளியாகும் சல்பர்-டை-ஆக்சைடு ($SO_2$) உள்ளிட்ட நச்சு வாயுக்களை சுவாசிப்பதால் சுற்றுப்புற கிராம மக்களுக்கு கண் எரிச்சல் முதல் நுரையீரல் செயலிழப்பு வரை பலதரப்பட்ட நோய்கள் உருவாகின்றன.

- நிலக்கரியை வெட்டி எடுப்பதற்காகவும், அனல்மின் நிலையத்தில் எரிந்து முடிந்த சாம்பலைக் கரைத்து வெளியேற்றுவதற்காகவும் சுரங்கத்தின் அடியில் உள்ள தண்ணீர் பம்புகள் மூலம் வெளியேற்றப்படுவதால் நெய்வேலியை சுற்றியுள்ள பகுதிகளில் (விருத்தாச்சலம் வரையில்) நிலத்தடி நீர்மட்டம் வெகுவாக குறைந்து விவசாயத்திற்குப் பயன்படுத்தப்படும் மோட்டார்கள் பழுதடைந்து விவசாயிகள் பாதிக்கப்படுகின்றனர்.

• சுரங்கம் தோண்ட அதிக சக்தி வாய்ந்த வெடி பொருட்களை பயன்படுத்துவதால் பூமியின் தட்டுக்கள் குலைந்து நிலத்தடி நீர் அழுகிய முட்டை வாசத்துடன் வெளியேறுகிறது. இந்த நீரைத்தான் தற்போது வடக்குத்து, இந்திரா நகர் உள்ளிட்ட கிராம மக்கள் பயன்படுத்தி வருகின்றனர்.

• மேலும் சேறு கலந்த நீரினை பொது கால்வாய்கள் மற்றும் ஓடைகள் மூலம் வெளியேற்றுவதால் இவை தூர்ந்து போகின்றன. நெய்வேலி நிலக்கரிச் சுரங்கங்களில் இருந்து வெளியேற்றப்பட்டசேற்றினால் 45 ஆண்டுகளாக தூர்ந்து கிடந்த வாலாஜா ஏரி மக்களின் போராட்டங்களினால் சில ஆண்டுகளுக்கு முன்னர் தான் மறு சீரமைக்கப்பட்டது குறிப்பிடத்தக்கது.

• இயற்கை பேரிடர் காலங்களில் நிலக்கரி வெட்டும் இயந்திரங்கள் நீரில் மூழ்காமல் இருப்பதற்காக இராட்சத பம்புகளை வைத்து நீர் வெளியேற்றப்படும் போது (நீரோடும் பாதைகளில் சேறு தங்கியிருப்பதாலும், நீரை தேக்கி வைக்கும் நீர்நிலைகள் தூர்ந்து போவதாலும்) நெய்வேலியில் சுற்றியுள்ள பகுதிகளில் வாழும் மக்கள் என்.எல்.சி யால் செயற்கையாக உருவாக்கப்படும் வெள்ளத்தில் சிக்கி உயிரிழப்பதும். உடைமைகளை இழப்பதும் வாடிக்கையாகிறது. **கடந்த 2015 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் ஏற்பட்ட மழை வெள்ளத்தின் போது என்.எல்.சி நிர்வாகம் வெளியேற்றிய நீராலேயே செங்கால் ஓடையில் வெள்ளப்பெருக்கு ஏற்பட்டு குறிஞ்சிப்பாடி மற்றும் சுற்று வட்டார கிராம மக்கள் பாதிக்கப்பட்டனர்.** மேலும் மேல்பாதி உள்ளிட்ட கிராமங்களில் சாலைகளிலேயே நீரை வெளியேற்றி ஊரையே வெள்ளத்தில் மூழ்கடித்ததெல்லாம் அராஜகத்தின் உச்சம் என்றே கூறலாம். இதனாலேயே முன்னால் கடலூர் மாவட்ட ஆட்சியரும் கஜா புயலின் போது சிறப்பு அதிகாரியாக நியமிக்கப்பட்ட ககன்தீப் சிங் பேடி முன்னெச்சரிக்கை நடவடிக்கை எடுக்கும்போது 'என்.எல்.சி யில் இருந்து நீரை வெளியேற்றாதவாறு நாங்கள் பார்த்துக் கொண்டிருக்கிறோம்' என்று ஊடகங்களுக்கு அளித்த நேர்காணலில் கூறினார்.

• என்.எல்.சி யிலிருந்து வெளியேற்றப்படும் நீரில் சல்பர்-டை-ஆக்சைடு கலந்து இருப்பதால் அவற்றில் மீன்கள், தவளைகள், பாம்புகள் என எந்த உயிரினங்களும் வாழ்வதே இல்லை. இந்நீர் கலக்கும் நீர்நிலைகளில் வாழும் மீன்களும் உடனடியாக செத்து மிதக்கத் தொடங்கிவிடும்.

• மேலும் தற்போது வெட்டப்பட இருக்கும் மூன்றாம் சுரங்கத்திற்காக விருத்தாசலத்திற்கு அருகில் மணிமுக்தா ஆறும் வெள்ளாறும் இணைக்கப்பட இருக்கின்றன. இதனால் இயற்கை சூழல் மாறுபடுவது மட்டுமின்றி மழைக்காலங்களில் வெள்ளம் ஏற்பட்டு பேரழிவுகள் ஏற்படவும் வாய்ப்புகள் உள்ளன.

இவ்வாறாக கடலூர் மாவட்ட மக்களுக்கும், அதன் இயற்கைச் சூழலுக்கும் அனைத்து வகையிலும் துன்பம் விளைவிக்கும் என்.எல்.சி நிர்வாகம் அத்துன்பத்தை மேலும் அதிகமாக்க துடிப்பதும் அதனைச் செய்து கொடுக்க மத்திய மாநில அரசுகளும் தயாரான நிலையில் இருப்பதும் தான் பேரவலம்.

தன்னால் '42 ஆயிரம் ஏக்கர் விவசாய நிலம் தண்ணீர் பெறுகிறது' என தம்பட்டம் அடித்துக் கொண்டிருக்கும் என்.எல்.சி நிர்வாகம், 'விவசாயத்தை காப்போம்' என்ற முழக்கம் முன்னெப்போதும் விட வலுவாகி இருக்கும் இந்நேரத்தில், நிலத்தை நஞ்சாக்கும் ரசாயனங்களை விடுத்து உழவர்கள் இயற்கை வேளாண்மையை நோக்கி நகரும் இந்நேரத்தில், 12 ஆயிரம் ஏக்கர் விவசாய நிலங்களை அடியோடு அழிக்க துடிப்பதும் இயற்கை சூழலை சிதைக்க முற்படுவதும் மக்களுக்கு மட்டுமல்ல வாழும் அனைத்து உயிரினங்களுக்குமே விரோதமானது.

இவற்றிலிருந்து மீள்வதற்கு, இப்பேரழிவை தடுப்பதற்கு ஆளாளுக்கு தங்களுக்கு தெரிந்த வழியைச் சொல்லிக் கொண்டுதான் இருக்கிறார்கள். "ஆட்சி மாறினால் இத்திட்டத்தை ரத்து செய்து விடுவார்கள்" என ஒரு சாராரும், "மக்கள் திரள் போராட்டங்களை நடத்தினால் போதும்" இதனை தடுத்து விடலாம் என சிலரும், "வெறும் சட்ட போராட்டங்கள் நடத்தினால் போதும் இதை தடுத்து விடலாம்" என சிலரும் தங்கள் தரப்பு யோசனைகளை கூறிக் கொண்டுதான் இருக்கிறார்கள்.

இப்படியான தனித்தனியான வழிமுறைகளின் மூலம் நிலத்திற்கு வழங்கும் பணத்தை வேண்டுமானால் சிறிது உயர்த்தி வாங்க முடியுமே தவிர இவற்றின் மூலம் பிரச்சினையைத் தீர்க்க இயலாது. இப்பிரச்சினையை தீர்க்க அமைப்பாக்கப்பட்ட மக்கள் திரள் போராட்டமும், புரட்சிகர இயக்கத்தின் தலைமையிலான புரட்சிகரப் போராட்டமும், சட்ட வல்லுனர்களை கொண்ட சட்டப் போராட்டமும் நடத்தப்பட வேண்டிய கட்டாயம் உள்ளது.

இவை ஏற்கனவே நமது தோழர்களால் 'வல்லம் முந்திரி காடு' மீட்புப் போராட்டங்களில் செயல்படுத்தப்பட்டு ஒரு வெற்றி அடைந்த வழியுமாகும். அப்போராட்டம் மேற்கண்ட மூன்று வழிகளையும் ஒருங்கிணைத்து பின்பற்றியதன் மூலமே வெற்றி அடைந்தது (இம்மூன்றில் ஒன்றை தவற விட்டிருந்தாலும் அப்போராட்டம் அதிதீவிரவாதமாகவோ, இல்லை சட்டவாதமாகவோ அல்லது தூத்துக்குடியில் நடந்தது போன்ற மக்கள் படுகொலையாகவோ மாறித் தோல்வியை தழுவி இருக்கும்).

எனவே சொந்த மண்ணில் சுயமரியாதையுடன் வாழப் போகிறோமா? அல்லது உடைமையையும், உரிமையையும் இழந்து வந்தாரங்குடியாகி திரியப் போகிறோமா? என்ற முக்கிய முடிவை மக்கள் எடுக்க வேண்டிய காலகட்டம் இது.

நம் மண்ணை காக்க நாம் எதையும் செய்ய தயாராக இருந்தால், அவற்றை அபகரிக்க என்.எல்.சி நிர்வாகத்திற்கும் அரசிற்கும் துணிச்சல் வரப்போவதில்லை. இம்மாதிரியான போராட்டங்களில் அரசின் அடக்குமுறைகள் கடுமையானதாகத்தான் இருக்குகின்றன. ஆனாலும் அவற்றை கடந்து இப்போராட்டத்தை எடுத்து செல்வதில்தான் இப்போராட்டத்தின் வெற்றி அடங்கியுள்ளது. மக்களின் போராட்டங்களை கண்டுதான் என்.எல்.சி நிர்வாகத்தினரும், மத்திய, மாநில அரசுகளும் அஞ்ச வேண்டுமே தவிர, என்.எல்.சி நிர்வாகத்தையோ, அரசையோ கண்டு போராடும் மக்கள் அஞ்சக்கூடாது.

-தோழர் பூ.சிவக்குமார்

# நெய்தலும் பாலையாகும்

ஏகாதிபத்தியங்களின் நலனுக்காக மூன்றாம் உலகநாடுகளின் இயற்கைவளங்களும், உழைப்புச் சக்தியும் இன்றுவரை சுரண்டப்பட்டுக்கொண்டே இருக்கின்றன. இக்கொடுமைகளுக்கு இந்திய ஆளும் வர்க்கத்தால் ஒடுக்கப்பட்டிருக்கும் தமிழ்நாடும் விதிவிலக்கல்ல. ஃபோர்டு, ஹூண்டாய் என குறைந்த கூலிக்கு தமிழ்நாட்டுத் தொழிலாளர்களின் உழைப்பை ஒட்டச் சுரண்டும் தொழிற்சாலைகளும், மலைகளை உடைத்தல், தாதுமணல் கடத்தல் ஆகிய இயற்கைவளக் கொள்ளைகளும் என ஏகாதிபத்தியங்களின் திருவிளையாடல்கள் நிகழ்ந்த வண்ணமே இருக்கின்றன.

இவற்றின் மேலும் ஒரு அங்கமாகத்தான் இலண்டனை தலைமையிடமாகக் கொண்டு செயல்பட்டுவரும் அனில் அகர்வாலின் வேதாந்தா நிறுவனத்திற்கு கடலூர், நாகை மற்றும் விழுப்புரம் மாவட்டங்களை ஒட்டிய குறைந்த ஆழமுள்ள கடல் பகுதியில் ஹைட்ரோ கார்பனை எடுக்க அனுமதி அளித்துள்ளது இந்திய அரசு.

அக்டோபர் 1, 2018 அன்று கையெழுத்தான ஒப்பந்தத்தின்படி இந்திய துணைகண்டம் முழுமைக்கும் மொத்தம் 55 இடங்களில் ஹைட்ரோகார்பன் எடுப்பதற்கு பல்வேறு பொதுத்துறை மற்றும் தனியார் நிறுவனங்களுக்கு அனுமதி வழங்கப்பட்டுள்ளது. இவற்றின் தமிழ்நாட்டில் மூன்று மண்டலங்களில் ஹைட்ரோகார்பன் எடுப்பதற்கு அனுமதி வழங்கப்பட்டுள்ளது.

- கடலூர் மாவட்டம் குள்ளஞ்சாவடியில் இருந்து நாகை மாவட்டம் வைத்தீஸ்வரன்கோவில் வரை (731 சதுர கிலோ மீட்டர்)
- விழுப்புரம் மாவட்டம் மரக்காணம் முதல் கடலூர் வரை
- கடலூர் மாவட்டம் பரங்கிப்பேட்டை முதல் நாகை மாவட்டம் வேளாங்கண்ணி வரை (1338 சதுர கிலோ மீட்டர்)

இந்திய துணைக்கண்டத்தில் நிலத்தின் அடியில் உள்ள வளங்களை எல்லாம் காட்டிக் கொடுக்கும் கங்காணி நிறுவனமான ஓ.என்.ஜி.சிக்கு முதல் மண்டலத்தில் தரைப்பகுதியில் ஹைட்ரோகார்பன் எடுப்பதற்கும், தூத்துக்குடியில் காவல்துறையை கைக்குள் போட்டுக் கொண்டு தனக்கு எதிராக போராடிய மக்களை சுட்டுக்கொன்ற வேதாந்தா நிறுவனத்திற்கு இரண்டு மற்றும் மூன்றாவது மண்டலங்களில் ஆழம் குறைந்த கடல் பகுதியில் ஹைட்ரோகார்பன் எடுப்பதற்கும் அனுமதி வழங்கப்பட்டுள்ளது.



வேதாந்தா குழுமத்தின் தலைவர் அனில் அகர்வால் உடன் மத்திய பெட்ரோலிய துறை அமைச்சர் தர்மேந்திர பிரதான்

**ஏற்கனவே தமிழகத்தில் ஒரு நாளைக்கு 700 டன் கச்சா எண்ணெயும் 38 லட்சம் கனமீட்டர் இயற்கை எரிவாயுவும் சுரண்டப்பட்டு கொண்டுதான் இருக்கின்றன.** இவற்றின் அடிப்படையில் ஏற்பட்ட சுற்றுச்சூழல் பாதிப்புகளின் விளைவாக பல கிராமங்களில், மக்கள் எதிர்ப்பினை தெரிவிக்கும் விதமாக பல போராட்டங்களை நடத்தியிருக்கின்றனர். குறிப்பாக கதிராமங்கலம் கிராம மக்கள் கிட்டத்தட்ட ஒரு போரையே நடத்திக் கொண்டிருக்கின்றனர். அதே நேரம் நெடுவாசலில் அறிவிக்கப்பட்டிருந்த ஹைட்ரோகார்பன் திட்டத்தை எதிர்த்து நெடுவாசல் மற்றும் சுற்று வட்டார கிராம மக்கள் அமைதிவழிப் போராட்டங்களை நடத்தி தனது எதிர்ப்பை தெரிவித்திருக்கும் இவ்வேளையில், இந்த ஹைட்ரோகார்பன் திட்டத்தை அறிவித்திருக்கிறது இந்திய அரசு. இவை போதாதென திருவாரூர் மாவட்டம் திருக்கரைவாசல் முதல் நாகை மாவட்டம் கரியபட்டி வரை 474.19 சதுர கிலோமீட்டர் பரப்பளவில் ஹைட்ரோகார்பன் எடுக்க மேலும் ஒரு திட்டத்திற்கு டெண்டர் கோரியுள்ளது. இந்த டெண்டரும் கூட ஒற்றைச் சாளர முறையில் வேதாந்தா நிறுவனத்திடமே ஏப்ரல் 10ஆம் தேதிக்குள் கோரப்பட்டுள்ளது.

ஹைட்ரஜன் கார்பன் சேர்ந்த எரிபொருட்கள் அனைத்தும் ஹைட்ரோ கார்பன்களே. நிலக்கரி, எரிவாயு, பாறை எரிவாயு, கச்சா எண்ணெயில் இருந்து பிரித்து எடுக்கப்படும் பெட்ரோல், டீசல், மண்ணெண்ணெய்,... போன்றவை பரவலாகப் பயன்படுத்தப்படும் ஹைட்ரோகார்பன்களாகும்.

முன்பு கச்சா எண்ணெய் இயற்கை எரிவாயு போன்றவற்றை எடுக்க தனித்தனியாக அனுமதி வழங்கப்பட்டு வந்த நிலையில் 2016 புதிய எண்ணெய் எடுப்பு கொள்கை உருவாக்கப்பட்டதற்கு பின்னர் ஹைட்ரோகார்பன் துரப்பணம் என்ற ஒற்றை அனுமதி பெற்றால் போதும் இவற்றில் எதை வேண்டுமானாலும் எடுத்துக்கொள்ளலாம் என மாற்றியது இந்திய அரசு.

தரைப்பகுதியில் இருந்து சுமார் 20,000 அடி ஆழம் வரை உள்ள எரிவாயுவை எடுப்பதற்கு நீரியல் வெடிப்பு முறை (Hydraulic Fracturing) எனும் முறையிலேயே இங்கு ஹைட்ரோகார்பன்கள் எடுக்கப்பட இருக்கின்றன.

தரையில் இருந்து கீழாக எரிவாயுக்கள் இருக்கும் பாறைப் படிவங்கள் வரை செங்குத்தாக துளையிட்டு பின்னர் பாறைகளை

எட்டியவுடன் கிடைமட்டமாக 2 கிலோ மீட்டர் தூரம் வரை துளையிட்டு, அத்துளைகளில் குழாய்களைச் செலுத்தி, இதனுள் 100க்கும் மேற்பட்ட ரசாயனங்கள் கலந்த நீரையும் மணலையும் அதிக அழுத்தத்தில் செலுத்துவார்கள். அப்போது கடினமான பாறைகள் வெடித்து அவற்றின் இடுக்குகளிலிருந்து அதிக வேகத்துடன் எரிவாயு வெளியேறும் இதனுடன் சேர்ந்து உள்ளே செலுத்தப்பட்ட ரசாயனம் கலந்த நீரும் மணலும் ரசாயன சேறாக வெளிவரும். இப்படியான முறையையே நீரியல் வெடிப்பு முறை என்று அழைக்கின்றனர்.

இந்த முறையில் எரிவாயுவை எடுக்கும் போது ஒரு எரிவாயு துரப்பண கிணற்றிற்கு 5 லட்சம் லிட்டர் நன்னீரும், 2500 டன் சீரான மணலும் தேவைப்படுகின்றன.

ஹைட்ரோகார்பன் எடுக்கப்படும்போது வெளியேறும் சேறு கலந்த ரசாயன கழிவில் எத்திலின் கிளைக்கால், மெத்தனால், ஐசோ-ப்ரோபனால், பார்மமைடு, நாப்தலின் போன்ற பல்வேறு ரசாயனங்கள் கலந்து வெளியேறுகின்றன. ஹெக்சாவாலண்ட் குரோமியம் (Hexavalent cromium Cr6+) என்ற புதிய ஒரு ரசாயனம் இப்படியான ஹைட்ரோகார்பன்கள் எடுக்கும் போது மட்டுமே உருவாவது கண்டுபிடிக்கப் பட்டுள்ளது. **இதுவரை மனிதன் கண்ட ரசாயனங்களிலேயே மிகவும் ஆபத்தானது ஹைட்ரோகார்பன் துரப்பணத்தின் போது வெளியேறும் ரசாயனங்கள்தான்** என்கிறது National Toxic Network எனும் ஆஸ்திரேலிய நிறுவனம். மேற்கண்ட ரசாயன கழிவுகளால் அருகிலுள்ள விவசாயநிலங்களும், நிலத்தடி நீரும், நீர் நிலைகளும் பாதிக்கப்படும். காற்றின் தன்மையை சுவாசிக்க தகுதியற்றதாக மாற்றிவிடும். இவை மட்டுமின்றி சுவாசமண்டல பாதிப்பு, கருச்சிதைவு, இரத்த சிவப்பணுக்கள் சிதைவுறுதல் என புற்றுநோய் வரையிலான உயிர் கொல்லி நோய்கள் ஏற்படுவதற்கான அனைத்து வாய்ப்புகளும் உள்ளன.

இது போன்ற ஹைட்ரோகார்பன் எடுக்கும் நிறுவனங்களைச் சேர்ந்த தொழிலாளர்களுக்கு மாதத்திற்கு 15 நாட்கள் மட்டுமே வேலையும் 15 நாட்கள் விடுமுறையும் அளிப்பதற்கான காரணம் கூட இம்மாதிரியான நோய்கள் எதுவும் விரைவில் வராமல் தள்ளிப்போடவே.

தமிழர்களின் ஐந்திணை மரபை பொறுத்த வரை நெய்தல் பாலை ஆகாது என்பர். அதனை பொய்யாக்கும் வகையில் அமைந்துள்ளது இந்த ஹைட்ரோகார்பன் திட்டத்திற்கான அறிவிப்பு. கடந்த 30 ஆண்டுகளாக தமிழகமெங்கும் உள்ள 700 க்கும் மேற்பட்ட சிறுகிணறுகளில் எண்ணெய் எடுக்கும் பணிகளை ஓ.என்.ஜி.சி நிறுவனம் செய்து வந்தாலும் அவை யாவற்றையும் நிலப்பகுதியிலேயே செய்துவந்துள்ளது. எண்ணெய் எடுப்பதனால் ஏற்படும் சுற்றுச்சூழல் சீர்கேடுகள் தற்போது கண்முன்னே தெரிய வருவதாலும், அதனை எதிர்த்து கதிராமங்கலம் நெடுவாசல் உள்ளிட்ட கிராமத்து மக்கள் போராட்டங்களில் இறங்கியதாலும், இனிவரும் காலங்களில் அமைக்கப்பட இருக்கும் ஹைட்ரோகார்பன் கிணறுகளில் பல, கடற்பகுதியில் அமைக்கப்பட இருக்கின்றன. இதனை கருத்தில் கொண்டுதான் தற்போது வேதாந்தா நிறுவனத்திற்கு குறைந்த ஆழம் கொண்ட கடற்பகுதியில் ஹைட்ரோகார்பன் எடுக்க இரண்டு மண்டலங்களை ஒதுக்கியுள்ளது மத்திய அரசு. மேலும் டெண்டர் கோரப்பட்டுள்ள திருக்கரைவாசல் முதல் கரியப்பட்டி வரையிலான ஹைட்ரோகார்பன் எடுக்கும் திட்டத்தில் கூட 60 விழுக்காடு இடம் கடற்பரப்பிலேயே அனுமதி அளிக்கப்பட்டுள்ளது.

ஆழம் குறைந்த கடற்பகுதிகளில் ஹைட்ரோகார்பன் எடுக்கும் பொழுது நிலத்தைகையகப் படுத்தும் சிக்கலோ, அவற்றிற்கு பணம் கொடுக்கவேண்டிய தேவையோ, வீட்டிற்கு ஒருவருக்கு வேலை வழங்க வேண்டும் என்ற நிர்ப்பந்தமோ கிடையாது. குறிப்பாக ஹைட்ரோ கார்பன் துரப்பணத்தின்போது வெளியேறும் கழிவுகளைப் பற்றி சற்றும் கவலைப்பட தேவையில்லை. கழிவுகளை பாதுகாக்கவோ, சுத்திகரிக்கவோ வேண்டியது இல்லை. அவற்றை அப்படியே கடலில் கலந்து விடலாம். கடற்பகுதியில் எந்த பொதுமக்களும் வந்து பார்க்கப் போவதில்லை. அப்படியே ஏதாவது மீனவர்கள் வந்து பார்த்தால் சுட்டுத் தள்ளிவிட்டு இலங்கை கடற்படை தான் சுட்டுக் கொன்றுவிட்டது என நாடகம் நடத்துவார்கள். எடுக்கப்பட்ட கச்சா எண்ணெயையோ, எரிவாயுவையோ வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதோ, சுத்திகரிப்பு செய்ய அனுப்புவதோ மிகவும் எளிதானதாகவும் இருக்கும். கச்சா எண்ணெய் சுத்திகரிப்பிற்கு தேவையான தொழிற்சாலைகளும் இவ்விடங்களை ஒட்டிய பகுதிகளில் அமைக்கப் பட்டுள்ளன.

கச்சா எண்ணெய் சுத்திகரிப்பு செய்ய 2100 ஏக்கர் பரப்பளவில் கடலூர் மாவட்டம் திருச்சோபுரம் கடற்கரையோரமாக ஆண்டுக்கு 21 மில்லியன் டன் எண்ணெய் சுத்திகரிப்பு திறன் கொண்ட நாகார்ஜுனா எண்ணெய் சுத்திகரிப்பு ஆலை அமைந்துள்ளது. மேலும் 57, 345 ஏக்கர் பரப்பளவில் 92 ஆயிரம் கோடி முதலீட்டில் கடலூர், நாகை மாவட்டங்களில் பெட்ரோ கெமிக்கல் மண்டலம் அமைக்க இருப்பதாக கடந்த ஜூலை 19, 2017 அன்று அறிவித்தது இந்திய அரசு. இத்திட்டம் கூட ஹைட்ரோகார்பன் துரப்பணத்தின் துணை திட்டமே.

முதன்முதலாக 2007 ஆம் ஆண்டு காவிரிப் படுகையின் கடற்பரப்பில் எரிவாயு இருப்பதை ஓ.என்.ஜி.சி நிறுவனமும் ஹார்டி ஆயில் நிறுவனமும் சேர்ந்து கண்டறிந்தன. பின்னர் 2012 ஆம் ஆண்டு பாரத் பெட்ரோ ரிசோர்சஸ் நிறுவனத்துடன் இணைந்து சிதம்பரத்தில் இருந்து 14 கிலோ மீட்டர் தொலைவில் கடற்பரப்பில் ஏராளமான எண்ணெய் வளம் இருப்பதை உறுதி செய்தது ஓ.என்.ஜி.சி நிறுவனம். இவ்வாய்வுகளின் அடிப்படையிலேயே தற்போது வேதாந்தா

நிறுவனத்திற்கு இப்பகுதிகளை இந்திய அரசு தாரைவார்த்து இருக்கின்றது.

இப்படியான ஹைட்ரோகார்பன்கள் கடற்படுகையில் பெரும்பாலும் 200 மீட்டர் ஆழத்திற்கும் குறைவானபகுதியிலேயே புதைந்துள்ளன. அவற்றை எடுத்து லாபம் பார்க்க வேதாந்தா நிறுவனம் துடித்துக் கொண்டிருக்கும் இதே இடத்தில் தான் காலங்காலமாக விழுப்புரம், பாண்டிச்சேரி, கடலூர், நாகை பகுதிகளை சேர்ந்த மீனவர்கள் மீன்பிடித்து வருகின்றனர் என்பதுதான் கவனிக்கப்பட வேண்டிய விடயம்.

நான்கு மாவட்டங்களில் சுமார் 250 கிலோ மீட்டர் நீளம் கொண்ட கடற்கரை பகுதிகளில், 200க்கும் மேற்பட்ட மீனவ கிராமங்களில் வசிக்கும், ஒரு லட்சத்திற்கும் மேற்பட்ட மீனவர்கள் இதே கடல் பகுதியை தான் தங்கள் வாழ்வாதாரமாக நம்பியுள்ளனர். ஹைட்ரோகார்பன் திட்டம் நடைமுறைக்கு வந்தால் கடலையும் கடற்கரையையும் சார்ந்து வாழ்ந்த நெய்தல் நில மக்களின் வாழ்வாதாரங்கள் கொள்ளை யடிக்கப்பட்டு அவர்களின் சொந்த இடங்களை விட்டு வெளியேற்றப்படுவர்.

ஹைட்ரோகார்பன் துரப்பணத்தின் போது வெளியேறும் கழிவுகள் கடலில் கலக்கப்படும்போது கடலில் வாழும் மீன்களும் மற்ற கடல் வாழ் உயிரினங்களும் முதலில் நோய் வாய்ப்படும், அதனை உண்ணும் மனிதர்களும் நோய்வாய்ப் படுவர். பின்னர் அவை இறந்து மிதக்க தொடங்கும். நாளடைவில் இப்பகுதிகளில் மீன்களே உற்பத்தியாகாத சூழ்நிலை உருவாகிவிடும்.

கழிவுகளால் மட்டுமின்றி இவற்றில் ஏற்படும் விபத்துக்களாலும் மிகப்பெரிய அளவில் பாதிப்புகள்



**2005 ஆம் ஆண்டு மும்பை கடல் பகுதியில் உள்ள ஓ.என்.ஜி.சி எண்ணெய் கிணற்றில் ஏற்பட்ட விபத்து**

ஏற்படும். கடந்த 2005 ஆம் ஆண்டு மும்பையில் கடற்பகுதியில் ஓ.என்.ஜி.சிக்கு சொந்தமான துரப்பணக் கிணற்றில் எண்ணெய் கப்பல் ஒன்று மோதியதால் ஏற்பட்ட தீயில் சிக்கி 11 பேர் உயிரிழந்தனர். மேலும் 11 பேர் காணாமல் போனதாக அறிவிக்கப்பட்டனர். படகுகள் மற்றும் கப்பல் மோதுவதால் மட்டுமின்றி கடல்சீற்றங்களின்போது கூட இது போன்ற அசம்பாவிதங்கள் ஏற்பட அதிகப்படியான வாய்ப்புகள் உண்டு.

மேலும் இந்நிறுவனங்கள் தாங்கள் எடுக்கும் கச்சா எண்ணெயை சுத்திகரிப்பதற்காக குழாய் மூலமாக தரைக்குக் கொண்டு வந்து அவற்றை சுத்திகரித்து பயன்படுத்த தகுந்த எரிபொருட்களாக மாற்றி ஏற்றுமதி செய்கின்றன. இம்மாதிரியான குழாய்களில் கசிவு ஏற்பட்டாலோ அல்லது உடைந்து போனாலோ அது மக்களுக்கு பாரிய விளைவுகளை ஏற்படுத்தும். அதற்கு ஒரு சிறந்த உதாரணம் என்றால் சென்னை துறைமுகத்திலிருந்து மணலியில் உள்ள இந்தியன் எண்ணெய் நிறுவனத்தின் (IOC) சுத்திகரிப்பு ஆலைக்கு 1969ல் பதிக்கப்பட்ட குழாய்களை சொல்லலாம். இன்று வடசென்னையில் நாம் காணும் சுற்றுச்சூழல் சீர்கேட்டிற்க்கெல்லாம் அடிப்படைக்காரணம் அக்குழாய்களில் ஏற்பட்ட எண்ணெய்க் கசிவுகளே. குழாய்களில் இருந்து கசிந்த கச்சா எண்ணெய் நிலத்தடி நீரில் கலந்து குடிநீரை குடிப்பதற்கு தகுதியற்ற கழிவுநீராக மாற்றிவிட்டது. ஆனாலும் இதுவரை அந்நிறுவனம் இக்குழாய்களை மாற்றவில்லை. இதனை மத்திய, மாநில அரசுகளும் கண்டு கொள்ளவில்லை.

உலகில் எங்கெல்லாம் 200 ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட வண்டல் பாறைகள் இருக்கின்றதோ அங்கெல்லாம் ஹைட்ரோகார்பன் வளங்கள் நிறைந்து காணப்படுகின்றன. இதற்கு பழம்பெரும் காவிரிப்படுகையும் விதிவிலக்கல்ல. காவிரிப் படுகையில் கொட்டிக்கிடக்கும் வளங்களைக் கொள்ளை யடிப்பதற்காக இந்திய ஆட்சியாளர்கள் தீட்டிய திட்டங்கள் கொஞ்சநஞ்சமல்ல. காவிரியில் தமிழகத்திற்கு கிடைக்க வேண்டிய நீரை தடுத்து செயற்கையான வறட்சியை உண்டாக்கினர். இலங்கை கடற்படை தமிழக மீனவர்களைத் தாக்கும்போதும், கைது செய்யும் போதும், ஏன் சுட்டுக் கொல்லும்போதும் கூட கண்டு கொள்ளாமல் விட்டிருந்தனர். தானே புயல், ஒகி புயல், கஜா புயல் என இயற்கை பேரிடர் காலங்களில் மக்களின் துயரை காணாமல் இவர்கள் கண்கள் மூடியே இருந்தன என்பது அனைவரும் அறிந்ததே. இவையாவும் காவிரிப் படுகைகளில் வாழும் உழவர்களையும், மீனவர்களையும் அப்பகுதியை விட்டு வெளியேற்றவே. இவ்வளவு துயரங்களையும் தாக்குப் பிடித்து வாழ்ந்து கொண்டு இருக்கும் கொஞ்சநஞ்ச விவசாயிகளையும் மீனவர்களையும் வெளியேற்றிவிட்டு காவிரிபடுகையை மொத்தமாக சுரண்டுவதே இவர்களின் தீர்மானகரமான முடிவு.

இதற்கு மேலும் நாம் அமைதியாக வேடிக்கை பார்த்தால் ஆப்பிரிக்காவில் பல பழமையான ஆற்றுப்படுகை வாழ் மக்களுக்கு என்னென்ன கொடுமைகள் எல்லாம் நேர்ந்ததோ அதைவிடவும் அதிகமான கொடுமைகளை நாம் சந்திக்க வேண்டிவரும். இக்கொடுமைகளில் இருந்து நம்மை காத்துக்கொள்ள இருக்கும் ஒரே வழி ஹைட்ரோகார்பன் திட்டத்திற்கு எதிராக ஒன்று திரண்டு போராடுவதே ஆகும். இத்திட்டத்திற்கு எதிராக போராடி நம் மண்ணையும், மக்களையும் காக்க வேண்டியது இம்மண்ணில் பிறந்த ஒவ்வொருவரின் கடமையாகும். எனவே நாம் நம் மண்ணையும், மக்களையும் காப்பதற்காக ஹைட்ரோகார்பன் திட்டத்தை எதிர்த்து போராடுவோம்! உழவர் மீனவர் வாழ்வாதாரங்களை பாதுகாப்போம்!

-தோழர் ப.கலை

# தமிழக பாட்டாளி வர்க்கத் தலைமையில் தமிழ்த் தேசிய விடுதலை

**தமிழ்நாடு ஓர் அடிமை நாடு. தமிழ் நாட்டு மக்கள் யாவரும் அடிமை மக்களே. தமிழக மக்கள் அனைவரும் ஒரு தேசிய இனமாவர்.**

*தமிழ்த் தேசிய இனத்திற்கு அரசியல் அதிகாரம் இல்லை. தமிழக மக்கள் அரசியல் அதிகாரம் பெறுவதற்கு உள்ள ஒரே வழி 'தமிழ்த் தேசிய விடுதலையே'.*

*தமிழ்த் தேசிய விடுதலையை வென்றெடுப்பதற்கான வழி வர்க்கப்போராட்ட வழியே!*

*வரலாறு யாவும் வர்க்கப் போராட்ட வரலாறு என்பதற்கு தமிழக வரலாறும் விதிவிலக்கல்ல!*

*கடந்த கால வரலாற்றை படிப்போம், நிகழ்கால வரலாற்றை புரட்டிப் போடுவோம், எதிர்கால வரலாற்றை மாற்றி எழுதுவோம்!*

*ஓர் அடிமை நாட்டில் சோஷலிசத்தை கட்டமுடியுமா? முடியாது! அந்நாடு அடிமைத் தளையிலிருந்து விடுதலை அடைந்தால் தான் அங்கு சோசலிசத்தை கட்ட முடியும்!*

*தமிழ்நாடு ஒரு அடிமைநாடு. தமிழகம் தேசிய விடுதலையைப் பெற்றாக வேண்டும். தமிழகம் தேசிய விடுதலையை வென்றால் தான் சோசலிசத் தமிழகத்தை படைக்க முடியும்.*

*தமிழ்நாடு தேசிய விடுதலையை வெல்ல வேண்டுமா? கம்யூனிஸ்ட்டாய் இரு, உண்மையான கம்யூனிஸ்ட்டாய் பாட்டாளி வர்க்க வழியில் நில், பாட்டாளி வர்க்கத் தத்துவமான மார்க்சிய தத்துவத்தை உயர்த்திப் பிடி, தமிழ்த் தேசிய விடுதலையை வெல்வது நிச்சயம்!*

*கம்யூனிஸ்ட்டாய் இருக்க வேண்டுமா? உண்மையான கம்யூனிஸ்ட்டாய் இருக்க வேண்டுமா? தமிழ்நாட்டில் இருந்துகொண்டு உண்மையான கம்யூனிஸ்ட்டாய் இருக்க வேண்டுமா? தமிழ்த் தேசிய விடுதலைப் போராட்ட*

அரசியலை முன்னெடு, அப்போது தான் உலகப் பாட்டாளி வர்க்கம் நடத்தும் உலகப் புரட்சியில் தமிழகப் பாட்டாளி வர்க்கமும் தமது பங்களிப்பை செலுத்துவதாய் இருக்கும்!

**தமிழ்த் தேசிய விடுதலைப் போராட்ட அரசியலை முன்னெடுக்காமல், தமிழ்நாட்டில் ஒருவன் கம்யூனிஸ்ட்டாய் இருக்க முடியாது. ஒரு கம்யூனிஸ்ட் கட்சி இல்லாமல் தமிழ்த் தேசிய விடுதலையையும் வெல்ல முடியாது.**

தமிழ்நாடு ஓர் அடிமை நாடு, தமிழ்நாடு அடிமைத் தளையிலிருந்து விடுதலை அடைந்தால் மட்டுமே, இங்கு சோசலிசத்தை கட்டி எழுப்ப முடியும். அப்போது தான் தமிழகம் சோஷலிசத் தமிழகமாக மாறும்.

தமிழ்நாட்டை அடிமைப் படுத்தியிருந்த ஆங்கிலேயரின் ஆதிக்கத்தில் இருந்து நேரடியாகத் தமிழ்நாடு விடுதலைப் பெற்றிருக்க வேண்டும். அவ்வாறு தமிழ்த் தேசம் விடுதலைப் பெறவிடாமல் வட இந்திய தரகு முதலாளிகள் அதிகாரத்தை கைமாற்றிக் கொண்டனர். **'இந்தியாவே போலிச் சுதந்திரம் தான் பெற்றுள்ளது'** எனும்போது தமிழகத்தின் நிலையை என்னவெனச் சொல்வது. ஏகாதிபத்தியத்தின் கீழ் அடிமைப்பட்டிருந்த நிலையுடன் மேலும் கூடுதலாக இந்திய அரசிடம் அடிமைப்பட்டுள்ளது தமிழகம். முன்பு ஆங்கிலேய ஏகாதிபத்தியம் மட்டுமே தமிழ்நாட்டைச் சுரண்டி வந்தது. இன்று உலகின் அனைத்து ஏகாதிபத்திய நாடுகளின் சுரண்டல் காடாகத் தமிழகம் உள்ளது. முன்பு ஆங்கிலேயர் ஆட்சியில் சென்னை மாகாண அரசுக்கு இருந்த அதிகாரங்கள் கூட இன்றைய தமிழ்நாடு அரசுக்கு இல்லை.

**ஆகஸ்ட் 15 தமிழ்நாட்டிற்கு சுதந்திர நாள் அல்ல, துக்க நாளே.** தமிழ்நாடு அடிமை நாடு தமிழ்நாட்டு மக்கள் அடிமை மக்கள். தமிழ்த் தேசிய விடுதலைக்கு தமிழக பாட்டாளி வர்க்கம் தலைமை ஏற்றுப் போராடினால் தமிழகம் சோசலிசத் தமிழகமாக மாறும்.

## தமிழக பாட்டாளி வர்க்கத் தலைமையில் தமிழ்த் தேசிய விடுதலை

வரலாறு யாவும் வர்க்கப் போராட்ட வரலாறே என்பதற்கு தமிழக வரலாறும் விதிவிலக்கல்ல.

தமிழ்நாட்டை எடுத்துக் கொண்டால் இங்கு சுமார் 10,000 ஆண்டுகளுக்கு முன்பே மக்கள் வாழ்ந்ததற்கான தொல்லியல் ஆதாரங்கள் கிடைத்துள்ளன. தொல்லியல் ஆய்வில் கிடைத்துள்ள பழங்கால கருவிகளை பார்க்குமிடத்து அக்கால மக்கள் புராதன பொதுவுடமை சமுதாயமாக வாழ்ந்து இருக்கக் கூடும் என்று தெரிகிறது.

தமிழ்நாட்டில் சங்ககாலம் என்று சொல்லப்படுகின்ற காலத்தில் ஆண்டான் அடிமை சமுதாய அமைப்பு நிலவியதாக தெரிகிறது. அன்று அடிமைகள் 'இளையோர்' என்றும் ஆண்டைகள் 'கிழவோர்' (கிழான்) என்றும் அழைக்கப்பட்டதாக தெரிகிறது.

கி.பி இரண்டாம் நூற்றாண்டளவில் இங்கு மிகப்பெரும் புரட்சி நடைபெற்றுள்ளது அது களப்பிரர் புரட்சியாகும். தொண்டை மண்டலத்தில் தொடங்கிய அப்புரட்சி சோழ மண்டலத்தில் பரவி பாண்டிய மண்டலம் வரை பற்றிக்கொண்டது. சேர மண்டலமே இன்று கேரளம் எனப்படுகிறது. களப்பிரர் புரட்சி நடந்த தொண்டை மண்டலமும், சோழமண்டலமும், பாண்டிய மண்டலமும் ஒன்றாக சேர்ந்து ஒரேத் தமிழ்நாடாகியது. அன்று தொடக்கம் இன்றுவரை தமிழகம் என்பது அதுவாகவே இருந்து வருகிறது. **தமிழக வரலாற்றை எழுதும் வரலாற்று ஆசிரியர்கள் சேர, சோழ, பாண்டியர் என சேரர் வரலாற்றையும் சேர்த்து எழுதுகின்றனர். ஆனால் இன்றைய தமிழகத்தில் சேரநாடு இல்லை என்பதை பார்க்கத் தவறுகின்றனர்.** இன்றைய தமிழகம் என்பது முன்பு தொண்டை மண்டலமாகவும், சோழ மண்டலமாகவும், பாண்டிய மண்டலமாகவும் இருந்த மூன்று பகுதிகளும்தான். வட தமிழ்நாட்டில் இருந்து களப்பிரர்கள் ஆட்சியை பல்லவர்கள் கைப்பற்றிக் கொண்டனர். தென் தமிழ்நாட்டில் இருந்து களப்பிரர்கள் ஆட்சியை பாண்டியர்கள் கைப்பற்றிக் கொண்டனர். நடுத் தமிழ்நாட்டிலிருந்து களப்பிரர் ஆட்சியை சோழர்கள் கைப்பற்றிக்கொண்டனர். பல்லவர், பிற்காலசோழர், பிற்கால பாண்டியர் ஆட்சிகளில் தமிழகத்தில் நிலப்பிரபுத்துவம் நன்கு வளர்ந்தது. தமிழ்நாட்டில் நிலப்பிரபுத்துவமானது 'காணியாட்சி' எனப்பட்டது. இராசராசசோழனின் ஆட்சிக்காலத்தில் நிலப்பிரபுத்துவம் உச்ச வளர்ச்சியை அடைந்தது. முதன் முதலாக நிலங்கள் அளக்கப்பட்டது அவனது காலத்தில் தான்.

குலோத்துங்கசோழன் ஆட்சி காலத்தில் கலகங்களும் புரட்சிகளும் வெடித்தன. சோழர்கள் ஆட்சி மங்கத் தொடங்கியது. அதேபோல் பாண்டிய நாட்டிலும் வாரிசுரிமைப் போர்கள் நடக்கலாயின. அதனை தொடர்ந்து முஸ்லீம் படையெடுப்புகளும், நாயக்கர் படையெடுப்புகளும் நடக்கலாயின. தமிழ் மன்னர்களின் ஆட்சிகள் தமிழ்நாட்டில் முடிவுக்கு வந்தன. தமிழ்நாட்டிற்கு வெளியில் இருந்து படையெடுத்து வந்து ஆட்சியை கைப்பற்றியவர்கள் தொடர்ந்து அவர்களின் கட்டுப்பாட்டிலேயே வைத்திருக்க முடியவில்லை. அவர்களின் பிரதிநிதியாக இங்கு இருந்தவர்கள் தமிழக நிலப்பிரபுத்துவ வர்க்கத்தின் செல்வாக்கில் தனி அரசு நடத்தத் தொடங்கிவிட்டனர். அந்த வகையில் மதுரையில் நாயக்கர் ஆட்சியும், தஞ்சையில் மராட்டிய வம்சத்தவர் ஆட்சியும், ஆற்காட் நவாப் ஆட்சியும் என தனி அரசுகள் அமைந்தன. அவ்வாட்சி காலத்தில் தெலுங்கர்களும், கன்னடர்களும், சௌராஷ்டிரர்களும் என பல்வேறு மக்கள் தமிழ்நாட்டில் வந்து குடியேறினர். அவ்வாறு வந்தவர்கள் நாளா வட்டத்தில் தமிழர்களாகவே மாறிவிட்டனர். மைசூர் அரசு காவிரியின் குறுக்கே அணைக்கட்டி தமிழ்நாட்டிற்கு தண்ணீர் வரவிடாமல் தடுக்க முயன்றபோது ராணி மங்கம்மாள் படையெடுத்துச்சென்று அணையை கட்டவிடாமல் தடுத்தாள்.

### ஐரோப்பியர் வருகை

ஐரோப்பாவை சேர்ந்த நாட்டினர் பலர் வியாபாரம் செய்ய தமிழ்நாட்டிற்குள் நுழைந்தனர். முதலாவதாக போர்த்துக்கீசியர் வியாபாரத்திற்காக தமிழகம் வந்தனர். அவர்களைத் தொடர்ந்து டச்சுக்காரரர்கள் தமிழ்நாட்டிற்கு வந்தனர். அடுத்து பிரஞ்சுக்காரர்கள் வந்தனர். அவர்களைத் தொடர்ந்து ஆங்கிலே**ய**ர்களும் வந்தனர்.

அந்தந்த நாட்டவரும் தமிழ்நாட்டின் ஒவ்வொரு பகுதியில் வாடகைக்கு எடுத்துக்கொண்டு அங்கு அவரவரும் கோட்டைகள் கட்டிக்கொண்டு வியாபாரம் செய்து வந்தனர். அவ்வாறு வியாபாரத்திற்காக வந்த அவர்களுக்குள் வியாபாரப் போட்டி கடுமையாகியது. அது நாடு பிடிக்கும் போர்களாகவும் மாறிவிட்டது. போர்த்துக்கீசியர்களும், டச்சுக்காரர்களும் வியாபாரப் போட்டியில் ஈடுகொடுக்க முடியவில்லை. ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரர்களுமே கடுமையாக மோதிக்கொண்டனர். பிரெஞ்சுக்காரர்கள் தமிழ்நாட்டின் பாண்டிச்சேரியையும், காரைக்காலையும் கைப்பற்றிக்கொண்டனர். பிற எஞ்சிய பெரும்பகுதி ஆங்கிலேயர் வசமானது. ஆங்கிலேயரின் ஆதிக்கத்தை எதிர்த்து தமிழ்நாடு ஆங்கிலேயர்களுக்கு அடிமைப்பட்டு விடக்கூடாது என்று நெற்கட்டும்சேவல் பூலித்தேவன், வீரபாண்டிய கட்டபொம்மன், மருது சகோதரர்கள் போன்றோர் வீரம் செறிந்த போர்களை நடத்தினர் அவர்களின் வீரம் செறிந்த போர்களை போலி கம்யூனிஸ்டுகள் நிலப்பிரபுத்துவ வர்க்கத்தின் போராட்டம் எனக் கொச்சைப்படுத்தி வருகின்றனர். பொருளாதாரவாதத்தில் மூழ்கிக்கிடக்கும் அவர்களுக்கு முதலாளிக்கும் தொழிலாளர்களுக்குமான கூலிப் போராட்டம் மட்டுமே வர்க்கப் போராட்டமாக தெரிகிறது. சரியான வரலாற்று ரீதியான வர்க்கப் போராட்ட பார்வை இல்லாததால் அவ்வாறு பார்க்கின்றனர், அவர்கள் நிலப் பிரபுத்துவ வர்க்கத்தினர் தான் சந்தேகமில்லை. ஆனால் அந்த காலகட்டத்தில் முதலாளி வர்க்கம் தோன்றியிருக்கவில்லை. தொழிலாளர் வர்க்கமும் கிடையாது. அந்த நிலையில் அந்நியர்களுக்கு அடிபணியக் கூடாது என அவர்கள் நடத்திய வீரம் செறிந்த போர், வரலாற்றில் புரட்சிகரமான பாத்திரத்தை வகித்தது. தமிழக மக்கள் இன்று நடத்திக் கொண்டிருக்கும் ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டங்களுக்கு அடித்தளமாக இருப்பது அவர்கள் நடத்திய போர்தான்.

ஆங்கிலேயர்கள் ஆற்காடு நவாப்பிடம் இருந்து தமிழ்நாட்டை நிர்வகிக்கும் உரிமையை விலை கொடுத்து வாங்கிக் கொண்டு, தமிழ்நாட்டில் ஆங்கிலேயர் ஆதிக்கம் ஏற்படுவதை எதிர்த்த பூலித்தேவன், கட்டபொம்மன், மருது சகோதரர்கள் போன்றோரை அழித்துவிட்டு, ஆங்கிலேயரிடம் பணிந்து போன நிலப்பிரபுத்துவ வர்க்கத்தவர்களுடன் சமரசம் செய்து கொண்டு தமிழகத்தை அடிமை நாடாக்கினர். வீரபாண்டிய கட்டபொம்மனையும் மற்றும் ஆங்கிலேய ஆதிக்கத்தை எதிர்த்தோரையும் காட்டிக்கொடுத்து ஆங்கிலேயருக்கு துணைபோன தொண்டைமானுக்கு மட்டும் சமஸ்தான மன்னர் அந்தஸ்து கொடுத்து வைத்துக் கொண்டனர். நாயக்கர் ஆட்சிக்காலத்தில் பாளையக்காரர்களாக இருந்தவர்களில் ஆங்கிலேயர்களை எதிர்க்காத, ஆங்கிலேயருடன் சமரசம் செய்துகொண்ட பாளையக்காரர்கள் ஜமீன்தார்கள் ஆக்கப்பட்டனர். தஞ்சையை ஆண்ட மராட்டிய வம்சத்து சரபோஜி மன்னன் தனது ஆட்சி நிர்வாகத்தை ஆங்கிலேயரிடம் ஒப்படைத்து விட்டு, அவர்களிடம் இருந்து மானியம் வாங்கிக் கொண்டிருந்தான். அன்றைய நிலையில் பாண்டிச்சேரி பிரஞ்சுக்காரர்கள் வசம் இருந்தது. ஏனைய தமிழகப்பகுதிகள் ஆங்கிலேயர் வசமானது (ஆற்காடு நவாப்பிடம் இருந்து தமிழ்நாட்டை விலைக்கு வாங்கிக் கொண்டதால்). ஆங்கிலேயர் வசமிருந்த தமிழ்நாட்டின் நிர்வாக அமைப்பில் புதுக்கோட்டை தனி சமஸ்தானமாக விளங்கியது. தமிழ்நாட்டில் பல ஜமீன்கள் இருந்தன. ஒவ்வொரு ஜமீன் நிலப்பகுதியும் அந்தந்த ஜமீன்தார்களால் ஆளப்பட்டு வந்தன. ஏனைய பகுதிகள் ஆங்கிலேயரின் நேரடி ஆட்சியின் கீழ் இருந்தன.

ஆங்கிலேயர்கள் தமிழ்நாட்டில் தொழிற்சாலைகளை நிறுவத் தொடங்கினர். அவர்களுடன் சேர்ந்து தமிழ்நாட்டு முதலாளிகளும் தொழில் துறையில் இறங்கினர். தமிழ்நாட்டில் நீண்ட காலமாக வணிகத்தொழில் செய்து வந்தவர்களும், வெளிநாட்டு வாணிபத்தில் ஈடுபட்டு வந்தவர்களும், வட்டித் தொழிலில் ஈடுபட்டிருந்தவர்களும், ஐரோப்பியர் வருகைக்கு பின் அடிமைகள் வியாபாரத்தில் ஈடுபட்டிருந்தவர்களும் (தமிழர்களையே அடிமைகளாக வெளிநாட்டினருக்கு விற்ற தமிழர்கள்) முதலில் முதலாளி வர்க்கமாய் தோன்றினர். அவர்கள் தரகு முதலாளிகளாய் ஏகாதிபத்தியங்களின் விசுவாசிகளாய் இருந்தனர்.

அவர்களைத் தொடர்ந்து தேசிய முதலாளி வர்க்கம் தோன்றியது. அதாவது வரலாற்றில் முதலாவதாக ஐரோப்பாவில் தோன்றிய முதலாளி வர்க்கமானது பட்டறை தொழிலில் ஈடுபட்டவர்களிடமிருந்து தோன்றியது. தமிழ்நாட்டில் தரகு முதலாளி வர்க்கமே தேசிய முதலாளி வர்க்கமாய் விளங்கியது. தமிழ்நாட்டில் அன்னியருக்கு அடிமைப்பட விரும்பாத ஒரு பிரிவு நிலப்பிரபுத்துவ வர்க்கம் அழிக்கப்பட்டு, மற்றொரு பிரிவு நிலப்பிரபுத்துவ வர்க்கம் ஆங்கிலேயருடன் சமரசம் செய்து கொண்டு விட்ட பிறகு, ஏகாதிபத்தியத்தால் தொழிற்துறை தொடங்கப்பட்ட பிறகு, ஏகாதிபத்தியத்துடன் கூட்டு சேர்ந்து தமிழக முதலாளிகள் வர்க்கம் தோன்றியதை தொடர்ந்து, தமிழ்நாட்டில் தமிழ்த் தேசிய கருத்துக்கள் தோன்றலாயின. தமிழ்த் தேசிய உணர்வுகள் தமிழக மக்களிடையே வளரவளர தமிழ்த் தேசிய உரிமைகளுக்கான போராட்டங்களும் நடக்கலாயின. அது மேலும் வளர்ந்து ஏகாதிபத்தியத்திற்கு எதிரான போராட்டமாக வளர்ந்தது.

தமிழ்நாட்டில் நிலப்பிரபுத்துவ காலகட்டத்தில் பல்லவநாடு, சோழநாடு, பாண்டியநாடு என தனித்தனி நாடுகளாக இருந்தது. அடுத்த கட்டத்தில் நாயக்கர், மராட்டியர், முஸ்லீம் ஆட்சி எனத் தனித்தனி நாடுகளாகவும், சிற்றரசுகளாகவும், வட்டார

அரசுகளாகவுமே இருந்தது, தமிழகத்தில் தொழில்துறை வளர்ச்சி தொடங்கிய பிறகு தமிழ்த் தேசியக் கருத்துக்கள் தோன்றத் தொடங்கின.

அதாவது தமிழ் இனம் ஒரு தேசிய இனம் தமிழ்த் தேசிய இனத்திற்கு தமிழ்த் தேசம் எனும் நாடு வேண்டும் எனும் அடிப்படையைக் கொண்ட கருத்து தோன்றத் தொடங்கியது, தொடக்கத்திலேயே அவ்வாறான முழுமை பெற்ற கருத்தாக தோன்றவில்லை. தமிழ் இனத்தின் கலாச்சார உரிமைகளாக மொழி உரிமைகளாக பொருளாதார உரிமைகளாகவே முகிழ்ந்து அரசியல் அதிகார உரிமையை நோக்கி வளர்ந்தது. அதன் விளைவு தமிழ்நாட்டில் மக்கள் தன்னெழுச்சியாகவும், இயக்கங்கள் சார்ந்தும் ஆங்கில ஏகாதிபத்தியத்தை எதிர்த்து போராட்டங்கள் நடத்தத் தொடங்கினர்.

அதில் முக்கியமானதும், முதன்மையானதும்1805 ல் நடைபெற்ற சிப்பாய் கலகம் ஆகும், அதனை சிப்பாய் கலகம் என மற்றவர்கள் கூறினாலும் உண்மையில் அது ஆங்கிலேய ஆட்சிக்கு எதிராக தமிழக மக்கள் நடத்திய **முதலாவது தமிழ்த் தேசிய விடுதலைப் போராகும்.** அதனை தொடர்ந்து மக்களின் தன்னெழுச்சியான போராட்டங்கள் நடக்க நடக்க, அமைப்புச் சார்ந்த போராட்டங்களும் நடக்கலாயின.

தமிழகத்தில் ஆங்கிலேய ஆட்சிக்கு எதிரான தமிழ்த் தேசிய உணர்வு மக்கள் மத்தியில் கிளர்ந்தது போலவே இந்தியத் துணைகண்டத்தில் இருந்த ஒவ்வொரு தேசிய இன மக்கள் மத்தியிலும் அந்தந்த தேசிய இனம் பற்றிய கருத்துக்கள் வளர்ந்தன. அதுகண்டு அச்சமுற்ற ஆங்கிலேய ஏகாதிபத்தியம் மக்கள் தேசிய விடுதலைப் போராட்டங்களில் ஈடுபடாமல் தடுக்கவும், தங்களின் சுரண்டலை அகில இந்தியாவிலும் நீட்டித்திருக்க செய்யவும் தங்களின் விசுவாசிகளான தரகு முதலாளி வர்க்கத்திற்கு நிர்வாகத்தில் பங்களிக்க முடிவு செய்து 'கியூம்' எனும் பாதிரியார் மூலம் இந்தியர்களுக்கும் (இல்லாத இந்தியர்) நிர்வாகத்தில் பங்கு எனும் முழக்கத்திற்காக 'இந்திய தேசிய காங்கிரஸ் கட்சி' எனும் ஒரு கட்சியைத் தோற்றுவித்தார். அக்கட்சியானது இங்கிலாந்து அரசுக்கும், கொடிக்கும் வாழ்த்துக் கூறியே தொடங்கப்பட்டது. **ஆங்கிலேயர்களால் அவர்களின் சுரண்டல் நலனுக்காகவும், இங்கிருந்த தரகு முதலாளிகளின் நலனுக்காகவும், தோற்றுவிக்கப்பட்டதே இந்திய தேசியமும் (இல்லாத தேசியம்), காங்கிரஸ் கட்சியும் ஆகும்.** தமிழ்த் தேசியத்திற்கு எதிராக இந்திய தேசியம் நிறுத்தப்பட்டது.

ஆங்கிலேயர் ஆட்சியில் அகில இந்திய தரகு முதலாளிகளுக்கு நிர்வாகத்தில் பங்கு வழங்கப்பட்டது என்றாலும், அதில் வட இந்திய தரகு முதலாளிகளுக்கு அதிக வாய்ப்புகள் கிடைத்தன. தென்னிந்திய தரகு முதலாளிகளுக்கு வாய்ப்புகள் மறுக்கப்பட்டன. அதன் விளைவாக தென்னிந்திய தரகு முதலாளிகளுக்கு என 'தென்னிந்திய நல உரிமைச் சங்கம்' (நீதிக்கட்சி-திராவிடர் கழகம்) செயல்பட்டது. வட இந்திய தரகு முதலாளிகளுக்காக காங்கிரஸ் கட்சியும், தென்னிந்திய தரகு முதலாளிகளுக்காக நீதிக் கட்சியும் செயல்பட்டன. இரண்டுமே ஆங்கிலேயர் ஆட்சிக்கு துணைபோவதில் போட்டி போட்டன. காங்கிரஸ் கட்சியோ ஆங்கிலேயர் ஆட்சியை எதிர்த்துப் போராடுவதாக பாசாங்காவது செய்தது. நீதிக் கட்சி அதுகூட கிடையாது முழுக்க முழுக்க ஆங்கிலேயர் ஆட்சிக்கு துணைபோனது.

தமிழகத்தில் தமிழ்த் தேசிய விடுதலைப் போராட்டம், உண்மையான -சரியான போராட்டம் வளர்ந்து விடாமல் தடுப்பதில் காங்கிரஸ் கட்சி கண்ணும் கருத்துமாய் செயல்பட்டது. நீதிக்கட்சி, திராவிட கட்சியே தமிழினத்திற்கான கட்சிபோல் போலித் தோற்றத்தை ஏற்படுத்தி தமிழ்த் தேசிய விடுதலைப் போராட்டம் நடந்து விடாமல் தடுத்தது. தமிழ்த் தேசிய இனம் விடுதலை பெறாமல் போனதற்கு முழுமுதல் காரணம் நீதிக் கட்சி, திராவிட கட்சியே.

தமிழ்நாட்டில் கம்யூனிஸ்டுகள் என்ற பெயரில் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியினர் இருந்தனர். அவர்கள் பெயருக்குத்தான் கம்யூனிஸ்டுகளே தவிர கம்யூனிச வழியும் தெரியாது. மார்க்சிய அரசியலும் தெரியாது. வர்க்கப் போராட்ட வழியும் தெரியாது. வர்க்கப் போராட்ட வழி நடைமுறையும் தெரியாது. அவர்களுக்கு தெரிந்ததெல்லாம் கூலி உயர்வு போராட்டம் மட்டுமே. அரசியலை பொறுத்தவரை காங்கிரஸ் கட்சியிடம் விட்டுவிட்டனர். காங்கிரஸ் கட்சியின் வாலாக செயல்பட்டனர். அவர்களுக்கு தமிழ்நாட்டின் வரலாறும் தெரியவில்லை. தமிழ்நாட்டு மக்கள் நடத்திய போராட்டங்களையும் கவனிக்கவில்லை. தமிழ்நாட்டு மக்களின் போராட்ட வரலாற்றை பார்த்திருந்தால் அவர்கள் தமிழ்த் தேசிய விடுதலை அரசியலை கைக்கொண்டிருப்பர்.

1947க்கு முந்தைய தமிழகத்தில் நிலவிய சமூக முரண்பாடுகளையும் மக்களின் போராட்டங்கள் பற்றியும் அறிந்து கொள்வது அவசியம்.

தமிழகத்தைச் சேர்ந்த பாண்டிச்சேரியும் காரைக்காலும் பிரெஞ்சியர் வசம் இருந்தது. பாண்டிச்சேரி, காரைக்கால் தமிழர்களுக்கும் பிரெஞ்சியருக்குமான முரண்பாடு நிலவியது. அங்கு தமிழக மக்கள் பிரெஞ்சு ஏகாதிபத்தியத்திற்கு எதிராக, தமிழ்த் தேசியத்திற்காக போராடி வந்தனர்.

புதுக்கோட்டை சமஸ்தான பகுதியை பொறுத்தவரை, அங்கு வாழ்ந்து வந்த மக்களுக்கும் சமஸ்தான அரசுக்கும் இடையில் முரண்பாடு நிலவியது. புதுக்கோட்டை சமஸ்தானம் என்பது 'நிலப்பிரபுத்துவம்' ஆகும். அந்த வகையில் சமஸ்தானத்திற்கும் மக்களுக்குமான முரண்பாடு நிலப்பிரபுத்துவத்திற்கு எதிரான முரண்பாடு ஆகும். அதற்கு சரியான அரசியல் தீர்வு என்பது தமிழ்த் தேசிய அரசியல் ஆகும்.

தமிழகத்தில் ஜமீன்கள் பல இருந்தன, ஒவ்வொரு ஜமீன் நிர்வாகத்திற்கும் மக்களுக்கும் இடையில் முரண்பாடு நிலவியது. ஜமீனுக்கும் மக்களுக்குமான முரண்பாடு நிலப்பிரபுத்துவ முரண்பாடாகும். அதற்கான அரசியல் தீர்வு தமிழ்த் தேசிய அரசியல் ஆகும்.

திருவாங்கூர் சமஸ்தானத்தின் கன்னியாகுமரி பகுதியில் வாழ்ந்த மக்கள் தமிழர்கள் ஆவர். அந்த மக்களுக்கும் திருவாங்கூர் சமஸ்தானத்திற்கும் ஆன முரண்பாடு என்பது நிலப்பிரபுத்துவ முரண்பாடாகும். திருவாங்கூர் சமஸ்தானம் என்பது மலையாளிகளை கொண்ட அரசு. அதனால் கன்னியாகுமரி மக்கள் திருவாங்கூர் சமஸ்தான அரசில் இருந்து விடுதலைப் பெற்று தமிழ்நாட்டுடன் சேர வேண்டும் என்று போராடினர். கன்னியாகுமரி மக்கள் நிலப்பிரபுத்துவ அரசில் இருந்தனர், அதற்கு தீர்வாக தமிழ் தேசிய அரசியலையே மேற்கொண்டனர்.

ஆக, பாண்டிச்சேரி மக்களுக்கு பிரெஞ்சு ஏகாதிபத்தியத்திடமிருந்து விடுதலை பெறுவதற்கான தீர்வாக தமிழ்த் தேசிய அரசியல், கன்னியாகுமரி மக்களுக்கு திருவாங்கூர் சமஸ்தானத்தில் இருந்து விடுதலை பெற தமிழ்த் தேசிய அரசியல், ஜமீன்களிடம் இருந்து விடுதலை பெற தமிழ்த் தேசிய அரசியல், எஞ்சிய தமிழக பகுதி மக்களுக்கு ஆங்கிலேய ஏகாதிபத்தியத்திடமிருந்து விடுதலை பெற தமிழ்த் தேசிய அரசியல் என தமிழ்த் தேசிய அரசியலை மையப்படுத்தி தமிழக மக்களை எல்லாம் ஒன்று திரட்டி போராடி இருக்க வேண்டும்.

1947க்கு முன் தமிழக மக்களை, தமிழ்நாட்டில் ஆங்கிலேயரின் நேரடி ஆட்சியின் கீழ் இருந்த மக்களையும், பாண்டிச்சேரி காரைக்காலில் பிரெஞ்சு ஏகாதிபத்திய ஆதிக்கத்தின் கீழ் இருந்த மக்களையும், புதுக்கோட்டை சமஸ்தான ஆட்சியின் கீழ் இருந்த மக்களையும், தமிழ்நாட்டில் ஜமீன்களின் ஆட்சியின் கீழ் இருந்த மக்களையும், திருவிதாங்கூர் சமஸ்தான ஆட்சியின் கீழ் இருந்த கன்னியாகுமரி மக்களையும், அவர்கள் அனைவரும் தமிழ்த் தேசிய இனம் என்பதால், அவர்கள் அனைவருக்குமான அரசியல் அதிகாரம் என்பது, அரசியல் விடுதலை, என்பது தமிழ்த்தேசம் தனிநாடாக விடுதலை பெறுவதிலேயே தங்கியுள்ளது. தமிழ்த் தேசிய விடுதலை எனும் அரசியலை மையப்படுத்தி அம்மக்களை எல்லாம் போராட்டங்களில் ஈடுபடுத்தியிருக்க வேண்டும்.

எந்த ஒரு தேசிய இனம் என்றாலும் அவர்கள் அரசியல் அதிகாரத்தை பெறுவதற்கான போராட்டத்தை அடிப்படையான அரசியலாக எடுத்துக் கொள்ளவேண்டும். அது இல்லாமல் மொழி உரிமைக்கான போராட்டங்கள், கலாச்சார உரிமைப் போராட்டங்கள் மட்டும் உரிமைகளை நிலைபெறச் செய்ய முடியாது.

தமிழக மக்கள் மத்தியில் தமிழ்த் தேசிய உணர்வை வெளிப்படுத்தும் மொழி உரிமை, கலாச்சார உரிமைகளை கொண்ட கோரிக்கைகள் வெளிப்பட்ட அளவிற்கு தமிழ்த் தேசிய இனத்தின் அரசியல் விடுதலைக்கான கோரிக்கைகள் பலமாக இல்லை என்றே கூறலாம். தமிழ்த் தேசியத்திற்கு எதிராக காங்கிரஸ் கட்சி செயல்பட்டது. நீதிக் கட்சியும் தமிழ்த் தேசிய இனம் என்பதை மூடிமறைக்கும் விதத்தில், 'திராவிட இனவாதத்தை' முன்வைத்து தமிழ்த் தேசிய இன மக்களுக்கு துரோகம் இழைத்துவிட்டது. தொடர்ந்தும் திராவிட கட்சிகள் துரோகம் இழைத்து வருகின்றன.

அக்காலகட்டத்தில் தமிழ்நாட்டில் இருந்த கம்யூனிஸ்ட் கட்சியினர் என்ன செய்தனர்? தஞ்சை மாவட்டத்தில் நிலப்பிரபுத்துவ எதிர்ப்பு, உழவர் புரட்சி எனச் சொல்லிக் கொண்டு விவசாயிகளை பொருளாதார போராட்டங்களில் ஈடுபடுத்தினர். புதுக்கோட்டை சமஸ்தானத்தில் இருந்த மக்களை உழவர்களை புரட்சியில் ஈடுபடுத்த வேண்டும் என்று எண்ணவில்லை. அதுவே சரியான நிலப்பிரபுத்துவ எதிர்ப்பு அரசியல் என புரிந்து செயல்படவில்லை. ஜமீன்தார்களின் ஆட்சிக்கு எதிராக போராடுவது நிலப்பிரபுத்துவ எதிர்ப்பு, உழவர் புரட்சி அரசியல் என புரிந்து செயல்படவில்லை. பிரெஞ்சியருக்கும், ஆங்கிலேயருக்கும் எதிராக தமிழ்த் தேசிய அரசியலை மேற்கொள்ளவில்லை.

ஆக, சரியான நிலப்பிரபுத்துவ எதிர்ப்பை மேற்கொள்ளாமல் தனிப்பட்ட நிலப்பிரபுக்களுக்கு எதிரான பொருளாதார போராட்டங்களையே நடத்தினர். இன்றுவரை கூட அதே நிலையிலேயே உள்ளனர். காரணம், அவர்கள் தரகு முதலாளிய வர்க்கத்தின் இந்திய தேசியம் எனும் போலி தேசிய அரசியலை மேற்கொண்டு இருப்பதேயாகும். தமிழ்நாட்டிலுள்ள கம்யூனிஸ்ட்டுகள் என்றைக்கு **தமிழ்த்தேசிய அரசியலை மேற்கொள்கிறார்களோ அன்றுதான் சரியான புரட்சியாளர்களாக, சரியான நிலப்பிரபுத்துவ எதிர்ப்பு உழவர் புரட்சியாளர்களாக, சரியான ஏகாதிபத்திய எதிர்ப்பு விடுதலைப் போராளிகளாக மிளிர முடியும்.**

ஏகாதிபத்திய நாடுகள் நெருக்கடிகளில் இருந்து விடுபடுவதற்காக அவர்களுக்கிடையே போர்கள் நடைபெறுகின்றன. இரண்டாம் உலக யுத்தத்திற்கு பிறகு, அத்தகைய போர்கள் நடைபெறாதிருக்க 'எந்த ஒரு ஏகாதிபத்தியத்தின் ஆதிக்கத்திலிருக்கும் காலனி நாட்டிலும் அந்த ஏகாதிபத்திய நாடு மட்டுமே தொழில் தொடங்க முடியும்' எனும் நிலைக்கு மாறாக, அந்த காலனிநாட்டில் உலகில் உள்ள அனைத்து ஏகாதிபத்திய நாடுகளும் தொழில் தொடங்கி சுரண்ட வசதியாக காலனிநாடுகளில் அரசியல் சீர்திருத்தங்கள் மேற்கொள்ளப்பட வேண்டும் என்றும், மேலும் முக்கியமாக அன்றைய காலகட்டத்தில் காலனி நாடுகளில் காலனீய விடுதலைப் போராட்டங்களில் கம்யூனிஸ்ட்டுகள் அதிகளவில் பங்காற்றினர். எனவே கம்யூனிஸ பரவலை தடுக்க காலனிநாடுகளில் அரசியல் சீர்திருத்தங்கள் மேற்கொள்ளப்பட வேண்டும் என்றும், எல்லாவற்றிற்கும் மேலாக இரண்டாம் உலக யுத்தத்தை பயன்படுத்திக் கொண்டு மேல்நிலை வல்லரசாக வளர்ந்துவிட்ட அமெரிக்க வல்லரசிற்கு, எல்லா காலனி நாடுகளிலும் தொழில் தொடங்கி உலகையே சுரண்ட எவ்விதத் தடையும் இல்லாத விதத்தில் காலனி நாடுகளில் அரசியல் சீர்திருத்தங்கள் மேற்கொள்ளப்பட வேண்டுமென்றும், இவற்றிற்காக காலனி நாடுகளில் ஏகாதிபத்தியங்களின் நம்பிக்கையான விசுவாசிகளாக உள்ள தரகு முதலாளி வர்க்கத்தின் கையில் அரசியல்

அதிகாரத்தை மாற்றித்தர வேண்டும் என்று முடிவெடுத்தனர்.

அமெரிக்க வல்லரசின் நிர்ப்பந்தத்தால் பல காலனிய நாடுகளில் அந்தந்த நாடுகளிலும், ஏகாதிபத்தியங்களின் விசுவாசிகளாக இருந்த தரகு முதலாளிய வர்க்கத்தை அதிகார வர்க்கமாக மாற்றினர். போலி சுதந்திரங்கள் வழங்கப்பட்டன. அவை மக்கள் போராட்டங்கள் மூலம் பெற்ற விடுதலைகள் அல்ல. அந்த வகையில் அமெரிக்க வல்லரசின் நிர்பந்தத்தால் இந்திய துணைக்கண்டத்தை விட்டு வெளியேற முழுவிருப்பம் இல்லாமலேயே, ஆங்கிலேயர்கள் இந்திய துணைக்கண்டத்தை விட்டு வெளியேற சம்மதித்தனர். அதன் விளைவாக ஏகாதிபத்தியங்களின் விசுவாசிகளாக விளங்கிய முஸ்லீம் லீக் கட்சியிடமும், காங்கிரஸ் கட்சியிடமும், முஸ்லிம்களுக்கான நாடு பாகிஸ்தான் என்றும், இந்துக்களுக்கான நாடு இந்தியாவென்றும், மதவாத அடிப்படையில் இரு நாடுகளில் அரசியல் அதிகார மாற்றத்தை ஏற்படுத்தித் தந்தனர். அந்த வகையில் இந்திய நாடு அமைந்தது என்பது ஆங்கிலேயர் (அமெரிக்கா) போட்ட பிச்சையே, அரசியல் சீர்திருத்தம் எனும் போலி சுதந்திரமே தவிர, சரியான தேசிய விடுதலை அல்ல.

இந்துக்களுக்கும், முஸ்லிம்களுக்கும் நடந்த மதக்கலவரத்தில் மக்கள் சிந்திய ரத்தம் கொஞ்ச நஞ்சமல்ல. மக்களின் ரத்தத்தை குடித்துக் கொண்டே இந்து மதவாத அடிப்படையில் இந்தியா எனும் நாடு ஏற்படுத்தப்பட்டது. அதில் தரகு முதலாளிய வர்க்க கட்சியான காங்கிரஸ் கட்சி ஆட்சியில் அமர்ந்தது. ஆங்கிலேயரிடம் இருந்து தமிழ்நாடு தனி சுதந்திர நாடாக மாறி இருக்க வேண்டும். அவ்வாறு தமிழ்நாடு தனியாக விடுதலை பெற்று இருந்தால் தமிழக மக்கள் ஏகாதிபத்தியத்திடமிருந்தும், நிலப்பிரபுத்துவத்திட மிருந்தும் முழுமையாக விடுதலை பெற்று இருப்பர்.

ஆங்கிலேயர்கள் தமது ஆதிக்கத்துக்கு உட்பட்டு இருந்த இந்தியத் துணைகண்டத்தில் எந்த ஒரு தேசமும் தேசிய விடுதலை பெற்றுவிடக் கூடாது என்பதற்காகவும், தமது சுரண்டல் குறைந்து விடக் கூடாது என்பதற்காகவும் இந்திய துணைக்கண்டம் முழுவதையும் ஒரே நிர்வாகத்தின் கீழ் வைத்துக் கொண்டனர். மேலும் தமது சுரண்டல் நீடிக்க வேண்டும் என்பதற்காக தரகு முதலாளி வர்க்கத்துடன் சமரசம் செய்து கொண்டு, இந்தியர்களுக்கும் நிர்வாகத்தில் பங்கு அளிப்பதாக கூறிக்கொண்டு, அவர்கள் ஆட்சி காலத்திலேயே இந்திய பாராளுமன்றத்தையும், மாகாண சட்டமன்றங்களையும் ஏற்படுத்தி விட்டனர்.

ஆங்கிலேயரின் ஆட்சிக் காலத்திலேயே டெல்லி பாராளுமன்றத்திலும், சென்னை மாகாண சட்டமன்றத்திலும் பங்காற்றிய காங்கிரஸ் கட்சி மக்களுக்கு எதிராக செயல்பட தொடங்கி விட்டது. அதிலும் முக்கியமாக தேசிய விடுதலைக்கு எதிராக - தேசிய இன விடுதலைக்கு எதிரான அடக்குமுறைகளை ஏவி விட்டது. அந்த வகையில் 1936ல் சென்னை மாகாணத்தின் முதலமைச்சராக இருந்த ராஜாஜி இந்தி மொழித் திணிப்பை தமிழ்த் தேசிய இன மக்களுக்கு எதிராக கொண்டு வந்தார். அப்போது நடந்து கொண்டிருந்தது ஆங்கிலேயர் ஆட்சி. அந்த ஆங்கிலேயர் ஆட்சி காலத்திலேயே தமிழ்த் தேசிய இன மக்களின் உரிமையை பறிக்கும் விதத்தில் இந்தி மொழித் திணிப்பை காங்கிரஸ்காரர்கள் கொண்டுவந்தார்கள் எனச் சொன்னால், 1947க்கு பிறகு டெல்லியில் மத்திய ஆட்சியில் அமர்ந்து கொண்ட காங்கிரஸ் ஆட்சியாளர்கள் தமிழ்த் தேசிய இன மக்களை ஒடுக்குவதில் எந்த அளவிற்கு முனைப்பாக இருப்பார்கள் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ!

மதக்கலவரத்தில் மக்களின் ரத்தத்தை குடித்துக் கொண்டே இந்திய ஆட்சியில் அமர்ந்த காங்கிரஸ் கட்சி ஆட்சியாளர்கள் தொடர்ந்து ஜனநாயகத்தை மதிக்காத விதத்தில் ராணுவ ஆட்சியை, ராணுவ ரீதியான அடக்குமுறைகளை மக்கள் மீது ஏவி விட்டனர். அந்த வகையில் ராணுவத்தை ஏவிவிட்டு இந்திய துணைகண்டத்தில் சுமார் 600 க்கும் மேற்பட்ட சமஸ்தானங்களை துப்பாக்கி முனையில் இந்திய அரசுடன் இணைத்துக் கொண்டனர். ராணுவத்தை ஏவி ஜமீன் ஆட்சிகளையும் பறித்துக் கொண்டனர். ஹைதராபாத் சமஸ்தானத்தை இந்திய அரசுடன் இணைக்கும் நடவடிக்கை எனக் கூறிக்கொண்டு இந்திய ராணுவத்தை ஏவி விவசாயப் புரட்சியாளர்களை கொன்று அழித்தனர்.

காஷ்மீர் முதல் கன்னியாகுமரி வரை கம்யூனிஸ்டுகளை வேட்டையாடுவதாக கூறிக்கொண்டு தொழிலாளர் களையும், விவசாயிகளையும், உழைக்கும் மக்களையும் வேட்டையாடினர். அடுத்து காஷ்மீர் மக்களின் தேசிய இன விடுதலைப் போராட்டத்தை ஒடுக்கினர். வட கிழக்கு மாநில மக்களின் தேசிய உரிமைகளை நசுக்கினர். இந்திய அரசு என்பது உண்மையான சுதந்திரநாடு அல்ல போலி சுதந்திரநாடு மக்களை மதிக்கத் தெரியாத மக்கள் விரோத அரசு. ராணுவ பலத்தில் தான் இந்திய அரசு நடந்து கொண்டிருக்கிறதே தவிர, ஜனநாயக அடிப்படையில் அல்ல.

தமிழ்த் தேசிய இனம், தமிழ்த் தேசிய விடுதலையைப் பெற்றிருக்க வேண்டும். அவ்வாறு விடுதலையைப் பெற்று இருந்தால் அதுவே தமிழக மக்களுக்கான சரியான விடுதலையாக இருந்திருக்கும். அதற்கு எதிராக இந்திய தரகு முதலாளி வர்க்கத்தினர் இந்திய தேசியத்தை, இல்லாத தேசியத்தை முன்னிறுத்தி தமிழ்த் தேசிய மக்களை ஒடுக்கி வருகின்றனர்.

## இந்திய தேசியம் என்பதன் சுயரூபம் என்ன?

ஒரு தேசியம் என்றால் ஒரே மொழி, ஒரே கலாசாரம், ஒரே பூகோளம், ஒரே பொருளாதாரம் கொண்டது ஆகும். அந்த வகையில் பார்த்தால், இந்திய தேசியம் என்பதில் ஒரு மொழியை மட்டும் பேசும் மக்களா உள்ளனர்? இல்லை, பல மொழிகள் இங்கு உள்ளன. ஆனால் இந்திய ஆட்சியாளர்களும் இந்திய தேசியத்தின் பெயரால் ஒரே மொழி மட்டுமே இருக்க வேண்டுமென்று இந்தி மொழியை ஆட்சி மொழியாக்கி, பிற மொழிகளை எல்லாம் அழித்து வருகின்றனர். அந்த வகையில் தமிழ் மொழியையும் அழித்து வருகின்றனர்.

அதே போல் தேசியம் என்றால் ஒரே கலாச்சாரம் இருக்க வேண்டுமென்று இந்திய தேசியத்தின் கலாச்சாரமாக, இந்து மதக் கலாச்சாரத்தை திணித்து, தேசிய இனங்களின் கலாச்சாரங்களை அழித்து வருகின்றனர்.

இந்தியாவிற்கு என்று ஒரு வரலாறு கிடையாது. ஆங்கிலேய ஆட்சிக்கு முன் இந்தியா என்ற ஒரு நாடு கிடையாது. இந்தியர் என்ற ஒரு இனமும் கிடையாது. ஆனால் இந்து மதவாத புனைகதையை கூறி, பரதன் என்றொரு மன்னன் பாரத தேசத்தை ஆண்டு வந்ததாகவும், அதுவே பாரத தேசம் என்கின்றனர் (தமிழக மக்களுக்கு இந்தியா என்று சொன்னால் தானே புரியும். 'பாரதம்' என்று சொன்னால் அது எங்கே உள்ளது என்று கேட்பார்கள்).

ஒரு தேசியம் என்றால் ஒரே பொருளாதார நிலை இருக்க வேண்டும். ஆனால் இந்தியாவில் பல தேசியங்கள் உள்ளதால் ஒவ்வொரு தேசிய இனமும் மற்றவற்றிலிருந்து ஏற்றத் தாழ்வான பொருளாதார நிலையிலேயே உள்ளது. ஒரே சீரான பொருளாதார நிலை கிடையாது. இந்திய தேசியத்தின் பெயரால் ஒவ்வொரு தேசிய இனமும் சுயமான தேசிய பொருளாதாரத்தை வளர்த்துக் கொள்ள முடியாத வகையில் ஏகாதிபத்திய சுரண்டலுக்கு வகைசெய்யும் தரகு முதலாளிகளின் ஒரே பொருளாதாரத்தை நிலை நிறுத்துகின்றனர்.

ஒரு தேசியம் என்றால் ஒரே பூகோள சூழ்நிலை இருக்க வேண்டும். ஆனால் இந்திய துணைக்கண்டமோ பல்வேறு தட்பவெப்ப சீதோஷன நிலைகளைக் கொண்டது. ஒவ்வொரு தேசிய இனமும் ஒவ்வொரு பூகோள நிலைகளைக் கொண்டுள்ளது என்றாலும், இந்திய தேசியத்தின் பெயரால் தேசிய இனங்களின் பூகோள எல்லைகளை அழித்து துணைக்கண்டத்தின் பூகோள எல்லையை இந்தியாவின் எல்லையாக காட்டுகின்றது.ஆக,

- இந்திய தேசியம் என்பது இந்தி மொழியை திணிப்பது, பிற தேசிய மொழிகளை அழிப்பது.
- இந்துமத கலாச்சாரத்தை திணிப்பது, தேசிய இனங்களின் கலாச்சாரங்களை அழிப்பது.
- தரகு முதலாளிகளின் பொருளாதாரத்தை நிலை நிறுத்துவது, தேசிய பொருளாதாரம் வளரவிடாமல் தடுப்பது.
- தேசிய இனங்களின் எல்லைக் கோடுகளை அழிப்பது, துணைக்கண்ட எல்லைக்கோட்டை விஸ்தரிப்பது என்பனவாகும்.

தமிழ்நாட்டிலும், பாண்டிச்சேரியிலும் வாழும் மக்கள் தமிழ்த் தேசிய இனமாவர். இந்த மக்களின் முன்னேற்றத்திற்கு தடையாக இருப்பவை, வாழ்விற்கும் வளர்ச்சிக்கும் தடையாக இருப்பவை இரண்டு. ஒன்று ஏகாதிபத்தியங்களின் சுரண்டலும் ஆதிக்கமும். மற்றொன்று நிலப்பிரபுத்துவத்தின் சுரண்டலும் ஆதிக்கமும். இவ்விரண்டின் ஆதிக்கத்தையும் தமிழக மக்கள் ஒழித்திடாமல் பார்த்துக் கொண்டிருப்பது இந்திய தரகு முதலாளிய அரசு ஆகும். தமிழ்த் தேசிய மக்கள் இந்திய ஆட்சியாளர்களிடமிருந்து விடுதலை பெற்றால் மட்டுமே ஏகாதிபத்திய சுரண்டல் ஆதிக்கத்திலிருந்தும், நிலப்பிரபுத்துவ சுரண்டல் ஆதிக்கத்திலிருந்தும் விடுதலைபெற முடியும். சுய தேசிய வளர்ச்சியை எட்ட முடியும்.

தமிழ்த் தேசிய விடுதலைப் போராட்டத்தை வரலாற்று ரீதியாக தலைமை ஏற்று நடத்த வேண்டிய தேசிய முதலாளி வர்க்கமோ பலவீனமான நிலையில் உள்ளது. ஏனென்றால் தமிழக முதலாளி வர்க்கத்தின் ஒருபிரிவினர் தரகு முதலாளிகளாகி, வட இந்திய முதலாளிகளுடன் கூட்டுச் சேர்ந்து தமிழ்த் தேசிய விடுதலைக்கு துரோகம் இழைத்து வருகின்றனர்.

**தமிழக குட்டி முதலாளிய வர்க்கத்தினரும் தமிழ்த் தேசிய இனம் அரசியல் அதிகாரத்தை பெற வேண்டும் அதற்காக தேசிய விடுதலைக்கான அரசியல் போராட்டத்தை மேற்கொள்வதே சரியான வழி என்பதை புரிந்து கொள்ளாது மொழி உரிமை, கலாச்சார உரிமைகளுக்காக மட்டுமே போராடி வருகின்றனர்.**

இந்நிலையில் தமிழ்த் தேசிய விடுதலைப் போராட்டத்திற்கு தமிழக பாட்டாளி வர்க்கமே தலைமை ஏற்க வேண்டியுள்ளது. தமிழக பாட்டாளி வர்க்கம், தமிழக விவசாயிகள் வர்க்கம், குட்டி முதலாளிய வர்க்கம், தேசிய முதலாளிகள் வர்க்கம், தொழிலாளர் வர்க்கம் ஆகிய மக்களை ஒரே அணியாய் சேர்த்துக் கொண்டு தமிழ்த் தேசிய விடுதலைப் போராட்டத்தை நடத்த வேண்டும்.

தமிழ்த் தேசிய விடுதலைப் போராட்டத்தில் விவசாயிகளையும் அணி சேர்க்க உழவர் புரட்சித் திட்டம் அவசியமாகும். தமிழ் தேசிய விடுதலைப் போராட்டத்தில் தமிழ்த் தேசிய முதலாளிகளையும் சேர்த்துக் கொள்ள வேண்டியது அவசியமாகும். அதற்கு ஐக்கிய முன்னணி தந்திரத்தை கையாள வேண்டும். ஏனெனில் தேசிய முதலாளி வர்க்கம் ஊசலாடும் வர்க்கமாக உள்ளது என்பதால்.

தமிழ்த் தேசிய விடுதலைக்கு இந்திய அரசுதான் இந்திய ஆட்சியாளர்கள்தான் காங்கிரஸ்-பி.ஜே.பி கட்சிகள்தான் எதிரிகள் என்றாலும், மத்திய அரசுக்கு முட்டுத் தாங்கிக் கொண்டிருக்கும் மாநிலக் கட்சிகளை அம்பலப்படுத்தாமல் அதிலும் முக்கியமாக இரு திராவிடக் கட்சிகளையும், தி.மு.க. - அ.தி.மு.க கட்சிகளை தமிழக மக்கள் மத்தியில் அம்பலப்படுத்தாமல், மத்திய அரசுக்கு முட்டுத் தாங்கிகளாய் மாநில கட்சிகள் உள்ளன என்பதை அம்பலப் படுத்தாமல் தமிழ்த் தேசிய விடுதலையை சாதிக்க முடியாது.

-தோழர் சு (எ) சுந்தரம்




# முதல் தொழிற்சங்கமும், தொழிலாளர்கள் போராட்டமும்

1920 களில் சென்னையில் பி அண்டு சி, பின்னி மில்லில் மிகப் பெரிய தொழிலாளர்கள் போராட்டம் நடந்தது. இந்தியத் துணைக்கண்டத்திலேயே தொழிலாளர்களுக்கு தொழிற்சங்க உரிமை வேண்டி நடத்தப்பட்ட முதல் போராட்டம் அதுவாகும். இந்திய துணைக்கண்டத்திலும் சரி, தமிழ் நாட்டிலும் சரி, தொழிலாளர்கள் போராட்ட வரலாற்றில் சிறப்பானதும், முக்கியத்துவமுடைய போராட்டமும் ஆகும். இப் போராட்டம் நடைபெற்று நூறு ஆண்டுகள் ஆகிறது. இந்த போராட்டத்தின் சிறப்புகளையும் படிப்பினைகளையும் நாம் தெரிந்துகொள்ள வேண்டிய தருணம் இது.

இந்திய துணைக்கண்டத்தில் விவசாயத்திற்கு அடுத்த படியான தொழில் என்றால் அது நெசவு தான். பெருவீத உற்பத்தியில் அமைந்த நெசவுத் தொழிற்சாலைகளே இந்திய துணைகண்டத்தின் முதல் தொழிற்சாலைகள். அத்தொழிற்சாலைகளே இங்கு முதன்முதலில் பாட்டாளி வர்க்கத்தையும் உருவாக்கின.

பின்னி அண்டு கோ எனும் நிறுவனம் 1876 மற்றும் 1881 ஆம் ஆண்டுகளில் பக்கிங்ஹாம் மற்றும் கர்னாட்டிக் மில்ஸ் என்ற இரட்டை தொழிற்சாலைகளை தொடங்கியது. ஆற்காடு நவாபிடம் வேலை பார்த்து வந்த ஜான் பென்னி என்ற ஆங்கிலேயரே இவற்றை தொடங்கினார்.

இவ்விரண்டு ஆலைகளில் ஒன்று பஞ்சிலிருந்து நூல் தயாரிக்கும் நூற்பாலையாகவும் மற்றொன்று நூலிலிருந்து துணியை நெய்யும் நெசவாலையாகவும் இயங்கி வந்தன.

சுமார் 16,000 தொழிலாளர்களைக் கொண்டு இவ்வாலைகள் மிகப் பிரமாண்டமாக இயங்கி வந்தன. ஆனால் அங்கு வேலை செய்த தொழிலாளர்களின் நிலைமை தான் மிகவும் மோசமானதாக இருந்தது. கங்காணி அடிமை முறையும், 15 முதல் 18 மணி நேர வேலையும், பெண்கள் -சிறுவர்கள் என அனைவரும் வேலை பார்த்தும் பட்டினி தீராத அளவிற்கு மிக குறைவான சம்பளமும், என தொழிலாளர்களின் நிலை மோசமான பின்தங்கிய நிலையிலேயே இருந்தது.

இந்நிலையில் தான் இந்திய துணைக்கண்டத்தின் முதல் தொழிற்சங்கமான 'சென்னை தொழிலாளர்கள் சங்கம்' 1818 இல் உருவாக்கப்பட்டது. பொதுவுடமை கருத்துக்களால் ஈர்க்கப்பட்டு மும்பையிலிருந்து சென்னை வந்து அமைப்பு கட்டிய பி.பி.வாடியாவை தலைவராகவும் சக்கரை (செட்டியார்), திரு.வி.க உள்ளிட்டவர்களை துணைத் தலைவர்களாகவும், செல்வபதி (செட்டியார்) ராமஞ்சலு (நாயுடு)

உள்ளிட்டவர்கள் செயலாளர்களாகவும் இருந்து தொழிலாளர்களுக்கு வழிகாட்டினர்.


பின்னி தொழிற்சாலை உட்புற புகைப்படம்

1818 சங்கம் தொடங்கப்பட்டு இருந்தபோது முதல் ஏகாதிபத்திய விரிவாக்கப் (உலகப்) போர் உச்சத்தில் இருந்ததால் சங்கம் தனது போராட்டங்களை அறிவிக்கவில்லை. போர் முடிவடைந்ததும் 1919 முதல் 1921 வரை சிற்சில போராட்டங்களை தொழிற்சங்கமும், தொழிலாளர்கள் தன் முயற்சியாகவும் நடத்திக் கொண்டே இருந்தனர். நாளடைவில் தங்களை அமைப்பாக வளர்த்துக் கொண்ட தொழிற்சங்கம் 1921 மே 20ஆம் நாள் எட்டு மணி நேர வேலை, தகுந்த ஊதியம், தொழிற்சங்கம் அமைக்கும் உரிமை,... போன்ற கோரிக்கைகளை முன் வைத்து தொடர் வேலை நிறுத்தத்திற்கு அழைப்பு விடுத்தது. அப்போது இப்போராட்டத்திற்கு நீதிக் கட்சியும் காங்கிரஸ் கட்சியும் கூட தங்களது ஆதரவைத் தெரிவித்து இருந்தன.

தொழிலாளர்களின் உறுதியான இப்போராட்டத்தை ஒடுக்க நினைத்த ஆங்கில ஏகாதிபத்திய அரசு வர்க்கங்களாய் திரண்ட தொழிலாளர்களை சாதிய ரீதியாக பிரிக்க முயற்சித்தது. அப்போது சென்னை சட்டசபை கவுன்சிலில் ஆங்கில ஏகாதிபத்திய அரசின் நியமன உறுப்பினராக இருந்த எம்.சி.ராஜா (இவருக்கு ஆங்கிலேய அரசு ராவ் பகதூர் பட்டமும் வழங்கியிருந்தது) “தாழ்த்தப்பட்ட தொழிலாளர்கள் போராட்டத்தில் கலந்து கொள்ள மாட்டார்கள். அவர்கள் எப்போதும்போல வேலைக்கு செல்வார்கள்” என அறிவித்தார். அதன் விளைவாக தாழ்த்தப்பட்டவர்களை தொழிலாளர் வர்க்கத்திடம் இருந்து சாதி ரீதியாக பிரித்தது ஆங்கில ஏகாதிபத்திய அரசு.

இந்த ஆலையில் பார்ப்பனர்கள் பெரும்பாலும் எழுத்தர்களாகவும், மேற்பார்வையாளர்களாகவும் இருந்தனர். அதனால் அவர்கள் தொழிலாளர்களின் வேலை நிறுத்த போராட்டத்தில் கலந்து கொள்ளவில்லை.

தாழ்த்தப்பட்ட தொழிலாளர்கள் தங்களின் உரிமைக்காக போராடிய தொழிற்சங்கத்தின் கோரிக்கைகளை மறுத்து எம்.சி.ராஜாவின் அறிவுறுத்தலின் அடிப்படையில் பார்ப்பனர்களுடன் வேலைக்குச் சென்றனர். அப்படி வேலைக்கு சென்ற தொழிலாளர்களை தொழிற்சாலை வாயிலில் நின்று தொழிற்சங்கத்தை சேர்ந்த தொழிலாளர்கள் தடுத்தனர். அதனைக் கண்ட போராட்டத்தை ஒட்டி தொழிற்சாலை வாயிலில் போடப்பட்டிருந்த காவல்துறை தொழிற்சங்கத்தைச் சார்ந்த தொழிலாளர்களைத் தாக்கியது. தொழிற்சங்கத்தினர் காவல்துறையைத் திருப்பித் தாக்கினர். பின்னர் காவல்துறை 7 தொழிலாளர்களைச் சுட்டுக் கொன்றது. பல தொழிலாளர்கள் படுகாயம் அடைந்தனர். இருந்தும் ஆறு மாதங்கள் வரை வேலை நிறுத்தப் போராட்டம் நீடித்தது.

**ஆங்கிலேய ஏகாதிபத்தியத்திற்கு எதிராகப் போராடிய தொழிலாளர்கள் பல சாதிகளாக இருந்தும் தொழிலாளர்கள் என்ற அடிப்படையில் வர்க்க ரீதியாக ஒன்று திரள முடிந்தது. இது வர்க்கப் போராட்டத்தின் வழி. இயல்பில் தொழிலாளர்களாக இருந்தும் வர்க்க ரீதியாக திரள விடாமல் சாதி ரீதியாக பிரித்து விட முடிந்தது. அது சாதிய சிக்கல்.**

சாதியால் தாழ்த்தப்பட்டவர்கள் போராட்டத்தில் இருந்து விலகிக் கொண்டாலும் தொடர்ந்து தொழிலாளர்கள் போராட்டத்தில் தீவிரம் காட்டினர். ஆங்கில ஏகாதிபத்தியத்தின் சூழ்ச்சி இங்கு தோல்வி அடைந்தது. ஆதித் தமிழர், சாதித் தமிழர், ஆரியத் தமிழர் என தொழிலாளர் வர்க்கத்தை பிரித்தும் போராட்டத்தை ஒடுக்க முடியவில்லை.

-தோழர் சுவை.முருகேசன்

## முதுபெரும் கம்யூனிஸ்ட் தோழர் ஏ.எம்.கே.விற்கு செவ்வணக்கம்

*1967 இல் நடைபெற்ற நக்சல்பாரி எழுச்சியின் போது, அன்று மேற்கு வங்க அரசில் பங்கு வகித்த சி.பி.எம் கட்சி மக்களுக்கு எதிரான நிலையை எடுத்ததையொட்டி சி.பி.எம் கட்சியிலேயே செயல்பட்டு வந்த புரட்சிகரத் தோழர்களால் சாருமஜூம்தார் தலைமையில் '**அகில இந்திய கம்யூனிஸ்ட் புரட்சியாளர் ஒருங்கிணைப்பு கமிட்டி**' தொடங்கப்பட்டது. அப்போது தமிழ்நாட்டில் அதன் பொறுப்பாளர்களாக தோழர் அப்புவும், ஏ.எம்.கோதண்டராமனும் இருந்தனர். இவ்வமைப்பே பின்னர் இந்திய பொதுவுடமைக் கட்சி (மார்க்சிஸ்ட்-லெனினிஸ்ட்) என மாறியது. தோழர் அப்புவின் இறப்பிற்கு பின்னர் நக்சல்பாரி கட்சியின் தமிழ்நாடு மாநிலச் செயலாளராக தோழர் கோதண்டராமன் இருந்தார். இவர் சாருமஜூம்தார், சுசில்தாராய் (சௌத்ரி), குன்னிக்கல் நாராயணன், கொண்டபள்ளி சீதாராமையா, நாகி (ரெட்டி), புலவர் கலியபெருமாள், தமிழரசன், ஏலகிரி இராமர், சிவலிங்கம் போன்ற தோழர்களுக்கு சமகாலத்தவராவார். கட்சி தொடங்கப்பட்ட காலத்திலிருந்து தன் வாழ்நாள் இறுதிவரை தலைமறைவாக இருந்த தோழர் ஏ.எம்.கே கடந்த ஆண்டு நவம்பர் 25 அன்று இயற்கை எய்தினார். அவருக்கு தமிழ்த் தேசிய பாதுகாப்பு தனது இயக்கம் செவ்வணக்கத்தைச் செலுத்துகின்றது.*



-தோழர் சி.பாஸ்கர்



## தோழர் அமல்ராஜிற்கு செவ்வணக்கம்

*1968 ஆம் ஆண்டு ஒருங்கிணைந்த தஞ்சை மாவட்டத்தில் திருத்துறைப்பூண்டி அருகே கீழ்வெண்மணி கிராமத்தில் கம்யூனிஸ்ட் கட்சித் தலைமையில் விவசாயக் கூலித் தொழிலாளர்கள் அறுவடைகாலத்தில் அரைப்படி நெல் கூலி உயர்வு கேட்டு போராடியதற்காக, கருப்பையா (மூப்பனார்) தூண்டுதலின் பேரில் உருவாக்கபட்ட '**நெல் உற்பத்தியாளர்கள் சங்கத்தை**' சேர்ந்த இருஞ்சூர் கோபாலகிருஷ்ண (நாயுடு) தலைமையில் 44 விவசாயக் கூலித் தொழிலாளர்கள் உயிரோடு தீயிட்டுக் கொளுத்தப்பட்டனர். அதற்கு எதிர்வினையாக 12 ஆண்டுகளுக்குப் பிறகு டிசம்பர் 12 அன்று கோபாலகிருஷ்ணனை அழித்தொழித்த தோழர்களில் ஒருவரான தோழர் அமல்ராஜ் கடந்த பிப்ரவரி 27, 2019 அன்று இயற்கை எய்தினார். தோழருக்கு தமிழ்த் தேசிய பாதுகாப்பு இயக்கம் தனது செவ்வணக்கத்தைச் செலுத்துகின்றது.*

-தோழர் பெ.சங்கர்

உலகத் தொழிலாளர்களே ஒன்று சேருங்கள் !

தேசிய இனங்களின் விடுதலை வெல்க !





தமிழ்நாடு விடுதலைப் போராளி

# தோழர் இலெனின் அவர்களுக்கு

# 25 ஆம் ஆண்டு செவ்வணக்கம்

மார்ச் 29

## தமிழ்த்தேசிய பாதுகாப்பு இயக்கம்

தொடர்புக்கு: 9524709860

உலகத் தொழிலாளர்களே ஒன்று சேருங்கள் !

தேசிய இனங்களின் விடுதலை வெல்க !





தமிழ்நாடு விடுதலைப் போராளி

# தோழர் தென்தமிழன் அவர்களுக்கு

# 2 ஆம் ஆண்டு செவ்வணக்கம்

சனவரி

20



**தமிழ்த் தேசிய பாதுகாப்பு இயக்கம்**

**தொடர்புக்கு: 9524709860**